# காதல் கண்கள்

ரவீந்திரநாத் தாகூர்



தமிழாக்கம்:

V. R. M. செட்டியார். B. A



STAR PUBLICATIONS
No. 5. NEW MARKET ST.,
KARAIKUDI (RAMNAD DIST.)

# "KATHAL KANGAL"

A TRANSLATION

FROM

SRI RABINDRANATH TAGORE

FIRST EDITION—JUNE 1953



விலை ரு. 2-8-0

STAR PUBLICATIONS

KARAIKUDI

PRINTED AT THE SOUTH INDIA PRESS, KARAIKUDI.

FOR STAR PUBLICATIONS, KARAIKUDI.

“கன்னி வயதிலுனைக் கண்டதில்லையோ ?—கன்னங்
கன்றிச் சிவக்க முத்த மிட்டதில்லையோ ?
அன்னியமாக நம்முள் எண்ணுவதில்லை — இரண்
டாவியுமொன் ருகுமெனக் கொண்ட தில்லையோ ?
பன்னிப் பலவுரைகள் சொல்லுவதென்னே ? துகில்
பறித்தவன் கைபறிக்கப் பயங்கொள்வானே ?
என்னைப் புறமெனவுங் கருதுவதோ ? கண்கள்
இரண்டினி லொன்றை யொன்று கண்டுவெள்குமோ?
நாட்டினிற் பெண்களுக்கு நாயகர் சொல்லும்-சுவை
நைந்த பழங் கதைகள் நானுரைப்பதோ ?
பாட்டுஞ் சுதியு மொன்று கலந்திடுங்கால்—தம்முட்
பன்னி யுபசரணை பேசுவதுண்டோ ?’’

— பாரதியார் —

# முன்னுரை

உலக மொழிகளில், 18 பாஷைகளில் தோன்றிய நூல், இந்தக் "காதல் கண்கள்".

தாகூர் வங்க மொழியில் பாடினார்; பின்னர் 1912ல் ஆங்கிலத்தில் அமைதியாக மொழிபெயர்த்தார்; 1953ல் தமிழில் இன்று வெளிவருகிறது.

இதில் காதல் மண்டிய வாழ்க்கையில் வளர்கின்ற கவிதை மணம் நிறைந்திருக்கிறது.

கவிதையைப்பற்றி, அமெரிக்காவில் IOWA ஐயோவா சர்வகலாசாலையில் உள்ள பேரறிஞர் திரு. சுதீந்திரபோஸ் அனுபவித்துக்கூறுகிறார்: "ஒருவன் தண்ணீர் அருந்தாமல் மூன்று நாள் உயிர்வாழலாம்; ஆனால் கவிதையின்றி ஒரு நாள்கூட உயிர்வாழ முடியாது; தாகூரின் கவிதை அத்தகைய தத்துவமும் உயிர்த்துடிப்பும், மனஎழுச்சியும், லட்சியகாம்பீரியமும், உண்மையும் அழகும் நிரம்பிய அகண்ட சக்தி வாய்ந்தது. தாகூரை யாருமே நன்றாய் ஆழ்ந்து அனுபவிக்கலாம்."

தாகூருக்கு நோபல் பரிசுகிடைப்பதற்கு காரணமாகஉள்ள நூல்களில் இதுவும் ஒன்றுதான: கீதாஞ்சலி, "இறைவா! இறைவா!" என்று அமைதியாக அஞ்சலி செய்கிறது. "காதல் கண்கள்," இன்ப—துன்ப நிகழ்ச்சிக்கோவைகளை கவிதை மணத்தோடு மின்னலோவியமாகவே சித்திரித்துக்காட்டுகிறது.

ஆங்கில மொழிபெயர்ப்பு, வசனகாவிய நடையிலே அமைந்திருப்பதால், நானும் வசனகாவிய நடையையே தமிழிலும் வழங்கியிருக்கிறேன். இந்த நுட்பமான முறையிலேதான், தாகூரின் கவிதை நலங்களை நயம்பட எடுத்துக்காட்ட முடியும். வேறு

எந்தநடையும் இதற்குப் பொருந்தாது. நான் இதை அனுபவ உறுதியோடு வற்புறுத்துகிறேன்.

கீதாஞ்சலிக்கு முன் எழுதப்பட்ட நூல் இந்தக் "காதல் கண்கள்": தாகூரின இளமையும், காதல் ரசமும் கலந்து புரளுகின்றன. ஆண்-பெண் கண்-காந்தம் ஆனந்த வெறியோடு சுழன்ருேடுகிறது.

காதலின் தன்மையை பாடித்தீர்த்துவிட முடியாது: காதலன், கவிஞன், பித்தன்-மூவரும் இன்ப வெறியிலே பித்துப் பிடித்தவர்களாகவே காட்சி யளிக்கிருர்கள். இதுவே ஷேக்ஸ்பியர் கண்ட மாபெரும் உண்மை: காதல் பைத்தியமும் எல்லை யற்றது, கவிதைப் பைத்தியமும் எல்லையற்றது, அசல் பைத்தியமோ எல்லை கடந்தது! கவிஞ னின் கொந்தளிக்கும் மின்னல் மொழியிலே, மூன்று நிலைகளும் கலந்து பரிமளிக்கின்றன. காதல் வெறி யைக் கவிதை வெறியாகவே, தாகூர் சித்திரிக்கிருர்.

தாகூரின் கவிதைகள், சுந்தரக் கவிதைகள்: அழகே உண்மை, உண்மையே அழகு என்று உல கத்துக்கு உறுதியாக எடுத்து விளக்கும் அபூர்வ ஆற்றல் நிரம்பிய கவிதைகள்.

கம்பரும், ஷேக்ஸ்பியரும், பாரதியாரும், ரவீந் திரரும், ஸ்டிரிண்ட் பர்க்கும், மாபஸ்ஸானும, திருவள்ளுவரும் காதலின் அகண்ட சக்தியையும், கவிதையின் அகண்ட சக்தியையும, நன்கு வாழ்க் கையில் அனுபவித்து உணர்ந்தவர்கள்.

திருவள்ளுவர், காமத்துப்பாலில், காதலின் அகண்ட உயிர்த்தத்துவத்தை 250 குறட்பாக்களில் சித்திரித்திருக்கின்ருர். காதற் கண்ணுடியாகவே காட்சியளிக்கிறது, 'செந்நாப்போதாரின் உபதேசம். உலக மொழிகளில் காணுத அதிசயங்களை யெல்லாம் பொய்யாமொழிப் புலவரின் சூத்திரங்களிலே கண்டு களிக்கலாமல்லவா?

" கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கம்இம் மூன்றும் உடைத்து."

(குறள்-1085)

எமனோ? கண்ணோ? பெண்மானோ? இந்த இளம் பெண்ணின் பார்வை இந்த மூன்றன் தன்மையும் உடையதாக இருக்கின்றது.

" கடாஅக் களிற்றின்மேல் கட்படாம் மாதர்
படாஅ முலைமேல் துகில்." (குறள்-1087)

மாதருடைய சாயாத கொங்கைகளின்மேல் அணிந்த ஆடை, மதம்பிடித்த ஆண்யானையின்மேல் இட்ட முகபடாம போன்றது.

" ஊடல் உணர்தல் புணர்தல் இவைகாமம்
கூடியார் பெற்ற பயன்." (குறள்—1109)

ஊடுதல், ஊடலை உணர்ந்து விடுதல், அதன்பின் கூடுதல் ஆகிய இவை காதல் வாழ்வு நிறைவேறப் பெற்றவர் பெற்ற பயன்களாகும்.

" மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்
செவ்வி தலைப்படுவார்." (குறள்-1289)

காமம் மலரைவிட மென்மை உடையதாகும்; அந்த உண்மை அறிந்து அதன் நல்ல பயனைப் பெறக் கூடியவர் உலகத்தில் சிலரே.

(டாக்டர் மு. வரதராசனர் தெளிவுரை)

* * *

கம்பன், காதலின் ஆழத்தையும் விரிவையும் எவ்வளவு நுட்பமாகஉணர்ந்துசித்திரித்திருக்கிறன். குறளாசிரியரின் வேகமும், பொருள நயமும், கம்பன் கவிதையில் புகுந்து, அழகையும் பெண்மையின் எழிலையுமகண்களின்விந்தையையும், காதல்நோயின் விசித்திரத்தையும் ராமன்-சிதையின் உள்ளங்களில் காட்டி மின்னலோவியமாகவே விளையாடுகின்றன; பெண்ணைக் கனியென்று கம்பன் கருதுகின்றன்; பெண்களை ரோஜா மலர்கள் என்றும, மிட்டாய்த்

துண்டுகள் என்றும் ஆங்கிலக்கவிஞன் கீட்ஸ் கருது கின்றான். பெண்மைத் தோற்றத்தையே, அழகு கலந்த மாயையென்றுவேர்ட்ஸ்வொர்த் எண்ணினான்.

"கொல்லும் வேலும் கூற்றமுமென்னும் இவை
[யெல்லாம்
வெல்லும வெல்லும் என்ன மதர்க்கும் விழி
[கொண்டாள்
சொல்லும் தன்மைத் தன்றது; குன்றும் சுவரும்
[திண்
கல்லும் புல்லும் கண்டுரு கப்பெண் கனிகின்றாள்."

* * *

"எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன்(று)
உண்ணவும், நிலைபெரு(து) உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினான், அவளும நோக்கினாள்."

தாகூரின் 'சித்திரா' ஒரு அருமையான சிருஷ்டிச் சிறப்புள்ள நாடகம்: தாகூரின் கைவண்ணம், நாடக சிருஷ்டியில்தான் மின்னலிடுகிறது. அருச்சுனன்-சித்திரா சம்பாஷணையில், காதல் காட்சிகள் குமுறிக் கொண்டும் கொந்தளித்துக் கொண்டும் பாஷையின் எல்லை தாண்டியே விளையாடுகின்றன. பெண்மையின் எழில், அழகின் ஆவேசம், சுந்தரக்கவிதை வெறியாகவே நம் கண்முன் விரிகின்றன. காதல், இன்பக்காதல், ஒரு அனுபவக் கனலாகவே காட்சியளிக்கிறது.

* * *

தாகூர் பெண்மையிலும் அழகிலும் ஆழ்ந்த நம்பிக்கை கொண்டவர்:

"காதல் துன்பத்தையே கொண்டு வந்தாலும், காதலையே நம்பு; உன் இதயத்தை மூடிவிடாதே!"

ஆனால் பிரெஞ்சுக்காதல் மேதை லாயர் பால்சக் BALZAC பெண்களிடத்தில் சிறிதும் நம்பிக்கை

இல்லாதவர்: அழகை, ஒரு விஷமாகவும் ஏமாற்ற மாகவுமே கருதுகிறார்:

"ஒரு அழகி கண்சிமிட்டும்போது, மனிதன் ஏமாந்துபோகிறான்: அவள் கண்ணிலே வயிரடால் அடிக்கும்போது, அவள் நெஞ்சிலே புயல் வீசும்; அவள் சிந்தனைச் சூறையை அறியச் சத்தியற்ற மனிதன், மயங்கி, மயங்கி, நம்பி, நம்பி மடிகிறான்; கடலின் அலைகள் திடீரென்று தோன்றி மறைவது போல், அழகியின் வதனத்திலே வளைவுகளும் நெளிவுகளும், காந்தப் புயலும் மோகனப் புன்முறுவலும் தோன்றித தோன்றி மறையும்; தன் கணவனையும் இப்படித்தான் திடீரென்று ஏமாற்றி விடுகிறாள். ஐயோ! பெண்ணை நம்பாதே!"

ஆனால் கீட்ஸ் என்ன சொல்லுகிறான்: "அழகே நித்தியானந்தம்: என்றும் அழியாதஇன்பம்; அழகே வளர்கிறது, என்றும் சூன்யமாகாத சுந்தர வடிவம்."

அழகு நிறைந்த மெல்லியலாரின் கண்களை நன்ருய் அனுபவித்தஷேக்ஸ்பியர் கூறுகிறான்: "பெண்களின் கண்களே சர்வகலாசாலைகள். சகல கலைகளையும், எழில் நிறைந்த கண்களிலே மின்னலிடக் காணலாம்."

* * * *

பாரதியாரின் 'குயில்' பாட்டு, காதலின் அகண்ட சக்திக்கு ஒரு சிறந்த நிகரற்ற விளக்கமாக அமைந்திருக்கிறது.

"விண்டுரைக்கமாட்டாத விந்தையடா! விந்தையடா!
ஆசைக் கடலின் அமுதடா! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாங்காட்சியடா!
பெண்ணொருத்தி அங்கு நின்றாள்; பேருவகை
கொண்டுதான்
கண்ணெடுக்கா தெனனைக்கணப் பொழுது
நோக்கினாள்;
சற்றே தலைகுனிந்தாள். சாமி! இவளழகை

எற்றே தமிழி லிசைத்திடுவேன்? கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?
மீள விழியில் மிதந்த கவிதையெலாம்
சொல்லி லகப்படுமோ? தூய சுடர்
முத்தையொப்பாம்
பல்லிற் கனியிதழிற் பாய்ந்த நிலவினை யான்
என்றும் மறத்தல் இயலுமோ? பாரின் மிசை
நின்றதொரு மின்கொடிபோல் நேர்ந்த மணிப்
பெண்ணரசின்
மேனி நலத்தினையும் வெட்டினையும் கட்டினையும்
தேனி லினியாள் திருத்த நிலையினையும்
மற்றவர்க்குச் சொல்ல வசமாமோ? ஓர் வார்த்தை,
கற்றவர்க்குச் சொல்வேன். கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே, பண்கூத்தெனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி, அதனோடே இன்னமுதைத் தான் கலந்து,
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவனின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்,
பெண்ணவளைக் கண்டு பெருங்களிகொண் டாங்கனே
நண்ணித் தழுவி நறுங் கன்னிதழினையே
முத்தமிட்டு முத்தமிட்டு மோகப் பெருமயக்கில்
சித்த மயங்கிச் சிலபோழ் திருந்த பின்னே,—''

எவ்வளவு அருமையாக, பாரதியார்—ஒரு நிகரற்ற கவிஞர்—ஒரு நிகரற்ற கவிதைச் சித்திரமாக பெண்மையையும் காதலையும் இங்கு வழங்கியிருக்கின்றார்.

* * * *

'' வீணையடி நீ யெனக்கு—மேவும் விரல் நானுனக்கு
... ... ... ... ... ... ... ... ... ... ...
வெண்ணிலவு நீ யெனக்கு—மேவுகடல் நானுனக்கு
பண்ணு சுதி நீ யெனக்கு—பாட்டினிமை நானுனக்கு
எண்ணி யெண்ணிப் பார்த்திடிலோர் எண்ணமிலை
நின்சுவைக்கே
கண்ணின் மணி போன்றவளே! கட்டியமுதே!
கண்ணம்மா!
.... .... .... ... ... ... ... ... ... ... ...

ஆசை மதுவே, கனியே, அள்ளு சுவையே!
கண்ணம்மா!
காதலடி நீ யெனக்கு—காந்தமடி நானுனக்கு
வேதமடி நீ யெனக்கு—வித்தையடி நானுனக்கு
போதமுற்ற போதினிலே பொங்கிவருந்
தீஞ்சுவையே!
நாதவடி வானவளே நல்லவுயிரே கண்ணம்மா!
... ... ... ... ... ... ... ... ... ... ...
எல்லையற்ற பேரழகே! யெங்கு நிறை பொற்சுடரே!
முல்லை நிகர் புன்னகையாய்! மோதுமின்பமே!
கண்ணம்மா!''

'சொல்லித் தெரிவதில்லை மன்மதக்கலை' என்று கூறுகின்ற பாரதியார், எவ்வளவு நயமாக, அருமையாகக் காதலின் அந்தரங்க இனிமையைச் சுவைத்திருக்கிறார்? கவிஞன் காதலை மறக்கத்தான் முடியுமா? காதலின் எல்லையற்ற தித்திப்பில்தானே, கவிதை குரலெடுத்துக் குமுறிக்கொண்டுவருகிறது. பாரதியின்சொற்கள் எல்லாம் அலங்காரச்சொற்கள் அல்லவே அல்ல; வாழ்க்கையின் அனுபவ ஆழத்தினின்று பொங்கி வழிகின்ற தேன் சொற்கள்: உணர்ச்சியின் உதிரத்திலே உருவெடுத்த உத்தமச் சொற்கள், கற்கண்டுக் கவிதைகள்.

"முத்தமிட ஆண்-பெண் அதரங்கள் நெருங்கும் போது, காதலர்களின் முழுமையும் கலந்து உருகி நிற்கின்றது" - என்று கவிஞன் டென்னிசன் அனுபவித்துப் பாடியிருக்கிறான். ஆசையே, அதிசயத்தில் புகுந்து, அமுதாக மாறிவிடுகிறது.

* * * * *

இயற்கைக்கு விரோதமான கட்டாயத் திருமணத்தின் விடியாமூஞ்சிக் காதலை வெறுக்கின்ற நமது பாரதிதாசன் கவிதைகளிலே, உண்மைக் காதல் துள்ளிக்குதித்தோடுகிறது. காதலில் வீரமும், வீரத்தில் காதலும், இரண்டும் கலந்த சோக

வெறியும் இன்ப விடுதலையும் மின்னலிடுகின்றன. ஷெல்லி கருதுவதுபோல, இயற்கை மண்டியகாதல் உலகில் சுதந்திரம் வேண்டும். ஜாதியோ, சட்டமோ, அபிப்பிராயமோ குறுக்கே வந்து குறும்பு செய்யக் கூடாது. அபிப்பிராய பேதங்களையும் சட்ட முரணை யும் ஜாதி முட்களையும் ஆதாரமாகக் கொண்டு எழு கின்ற திருமணம், திருமணமே அல்ல; இதயங்களை உடைக்கும் சூழ்ச்சிகள், தீய சிந்தனையுடன் பேயாட் டம் ஆடுகின்றன. காதலும் பகுத்தறிவும் கலந்த இருஉள்ளங்கள் கலந்துவாழ்வதில், ஜாதிக்கு என்ன வேலை? சட்டத்திற்கு இடமேது? புரோகிதர்கள் ஆதாரமற்று உளறிக்கொட்டுகின்ற மந்திர மூட்டை யும் யாருக்குத்தேவை? அழகனும், அழகியும்நேசமாய் வாழ்வதைத் தடுக்க முன்வருவது மதியீனம். "சஞ் சீவி பர்வதத்தின் சாரல்"—"புரட்சிக்கவி"—"மாந் தோப்பில் மணம்"—இவைகள் அருமையான காதல் கவிதைகள்.

"தாமரை பூத்த குளத்தினிலே—முகத்
தாமரை தோன்ற முழுகிடுவாள்! அந்தக்
கோமளவல்லியைக் கண்டுவிட்டான்—குப்பன்
கொள்ளை கொடுத்தனன் உள்ளத்தினை! அவள்
தூய்மை படைத்த உடம்பினையும்—பசுந்
தோகை நிகர்த்த நடையினையும்—கண்டு
காமனைக் கொல்லும் நினைப்புடனே—குப்பன்
காத்திருந்தான் அந்தத் தோப்பினிலே."

❋

"கண்டெடுத்தேன் உயிர்ப்புதையல்! அதோ
வந்துவிட்டாள்
கண்டெழுத முடியாத நறுங்கவிதை அவளே!"

பெண்மையின் எழிலை, சௌந்தரிய ஜிலுஜிலுப்பைச் சொல்லால் எழுதிக்காட்ட முடியாது, என்று கவி ஞன் உணர்வதும் இயற்கைதான், அல்லவா?

கம்பதாசன், காதலின் எழிலை இயற்கையின் ஜால விந்தையாகத் திட்டிக்காட்டுகிறார்: ஒட்டு மரங் கன்றுபோல, இரு உள்ளங்களும் இன்ப வெறியில்

நெருங்கிக் கலந்து உருகிக் கூவும்போது, காதல் கலைத் தீயாகவே மாறி விடுகிறது. கவிஞரின் "இரத்த ஓவியம்" அற்புதம்: நிகரற்ற அழகு, நிகரற்ற காதல், நிகரற்ற கவிதை. சந்திரனைக் கவிதையணங்காக ஓரிடத்தில் வருணிக்கிறார், கவிஞர்:

" திங்களெனும் பெண் திரும்பிடவே—அவள்
சேலையிருள் சிறிதே விலக
கொங்கை களிலொன்று காண்கிறதோ—கடல்
கூவி திரைகை கொட்டிச்சிரிக்க?

தாரணி மகிழ்ந்து பூசுதற்கு—குளிர்
தங்கிடும் சந்தனக் கிண்ணமதோ?
சாரமுள்ள இளங்காதலர்க்கு—மதன்
தம்பலம் வழங்கும் வெள்ளித் தட்டோ?"

உவமை உயர்ந்து உண்மையை உறுதி செய்கிறது, காதலிலே, வீரம் உதயமாகிறது.

" கன்னியர் கண்வீச்சு — வீரர்
கைபிடிக்கும் வெற்றி வாள்."

கவிஞன் காதலின் மர்மத்தை விளக்கும்போது, பாஷையே போதையாக, உணர்ச்சியைத் தூண்டும் லாகரியாக அமைந்து விடுகிறது. சில சமயங்களில், உணர்ச்சி குமுறி வரும்போது, பாஷையே ஒடிந்து துகள் துகளாகச் சிதறிப்போகிறது. பாரதியாரையும் பாரதிதாசனையும் பின் பற்றியே, கம்பதாசனின் இளங்கவிதை இன்ப வெறியில் கூவிக்கொண்டே உதயமாகிறது.

தாகூர் 'காதலன் பரிசு' என்ற பாடலில், காதலின் அமரத்வத்தை வற்புறுத்துகிறார்: ஷாஜகான் எழுப்பிய சிற்பச்சிகரமான Tajmahal "தாஜ்மகால்" காதலின் அழியாதசின்னமாக இன்றும் நிலைபெற்று நிற்கிறது; காதல் கண்ணீர், கலையோவியமாக விண்ணளாவி நிற்கிறதல்லவா? மனித முயற்சியைச் சிறைப்படுத்தும் காலம்கூட, காதற் சின்னத்திலே சிறையுண்டு கிடக்கிறது. இந்தச் சிற்ப எழில், காதலின் மகோன்னத வெற்றிதான்!

ஷெல்லி, ஓரிடத்தில் காதலின் விந்தையை அனுபவித்து வருணிக்கிறான்:

"ஆசையுடன் அருகருகே
படுத்திருந்து பொங்கியெழும்
ஆர்வத்தால் கரம் கோர்த்துச்
சமுத்திரமும் நிலப்பரப்பும
வீசுகின்ற தென்றலிலே
சேதி பல சேர்த்தனுப்பி
விம்முகின்ற இதயத்தின்
துடி துடிப்பில் துயிலமுந்தி
வாசமிகும் மலர்வகைகள்
முகிற்கூட்டம் நந்தவனம்
வட்டநகை பூக்கின்ற
வானமதி களாமீதில்
ஓசையுடன் மோதுகின்ற
அலையிவற்றில் நாமுணர்ந்து
உண்மையெனப் பெயர்சூட்டும்
கனவுகளைப் புனைந்திடுவோம்."

(EPIPSYCHIDION)

காதலைப்பற்றிப் பலரும் எழுதியிருக்கிறார்கள். மேதாவிகளும் மேதாவித்தன மாக எழுதுகிறார்கள்; மூதேவிகளும் மூதேவித்தனமாக எழுதுகின்றன.

ஆனால், காதலின் தத்துவமும் உண்மையும் என்ன? இதைத்தான் வங்கக் கவிஞர் தாகூர் மிக அருமையாகச் சித்திரிக்கிறார். வாழ்க்கைக்கும் காதலுக்கும் உள்ள அருமையான தொடர்பு என்ன. அதைக் காதலன்—காதலி எவ்வாறு எத்தகைய இன்பச் சிலிர்ப்புடன் அனுபவிக்கிறார்கள்.

இயற்கையின் வனப்பிலே, காதல் எவ்வாறு கொந்தளிக்கிறது; காதலன்-காதலி கண்கள் பேச ஆரம்பித்தபின், என்ன நிகழ்கிறது? காதல் பாஷையே தனி பாஷைதான். உலகில் எந்த பாகத்திலும் மனித சிருஷ்டி வனப்பு கொந்தளிக்கின்ற எந்த மூலையிலும், காதல் மொழி கற்கண்டாகவும்

கரும்புச் சாறுகவுமே காட்சியளிக்கிறது. பெண்மையின் கண்கள், எழில் சித்திரங்களையே தூண்டுகின்றன; கண்களிலே, காதல் மத்தாப்பிடும்போது, சொற்கள் ஒளித்துண்டுகளாகவே உதிர்கின்றன. கவிஞன், இந்த மத்தாப்பைக் கண்டதும், கவிதை எழிலோடு இந்தச் சித்திரத்தை அலங்கரிக்கும் போது பிரமாதமான உணர்ச்சி வெள்ளத்திலே, வாசகர்கள் சிக்கிக்கொண்டு திண்டாடவேண்டியது தான்.

காதலுக்கு வேண்டியது, தனிமையும் இனிமையும்தானே: காதலன்-காதலி உள்ளங்கள் மர்ம மொழியிலே கலந்து பேசும்போது, கவிஞன், நெஞ்சின் அலைகளை தனது அபூர்வ பாஷைக் கண்ணுடியிலே பிரதிபலிக்கச் செய்கிருன்.

தாகூரின் காதல் படங்கள், அபூர்வம்தான்: "Gardener" என்ற நூலிலே, வாழ்க்கையின் ஆழத்திலே, காதல் சித்திரங்கள்படர்ந்து மின்னிப் பொலிகின்றன. பெண் சிரித்தால், காதலன் ஏன் ஊமையாகிவிடுகிருன்; இன்பச் சிகரமான உணர்ச்சி வெள்ளத்திலே, இதயம் ஊமையாகி விடுகிறது; பேசாமலே, ஒருவர் எழிலை ஒருவர் கண்வாயிலாகவே குடித்துப் பருகிக்கொண்டு, காதல் உலகமே ஆரம்பிக்கும்போது ஊமை உலகமாகவே உதயமாகிறது; நெருங்க நெருங்க, உணர்ச்சி பெருகப் பெருக, பாஷை பாலாறுக உடலைச் சுற்றியே ஓட ஆரம்பிக்கிறது.

## சிறந்த காதல் சித்திரம்

இன்பம் பனித்துளி போன்றது; காதல் உலகிலே, துன்பம் உறுதியாகவும், உள்ளக் கிளர்ச்சிக்கு உறுதியளிப்பதாயும் சில சமயங்களில் அமைந்து விடுவதும் திண்ணம். காதலிலே, துன்பம் வருவதைப்பற்றிச் சிறிதும் கவலைப்படக்கூடாது. கவலை

யும் கண்ணீரும், காதலின் அந்தரங்கத்தை உறுதி செய்யும் அல்லவா?

சூரியனைக் கண்ட தாமரை, உடனே மலர்ந்து மணக்கிறது. சிலிர்த்து நிற்கும் நீர்த்துளிகள், காய்ந்தே மறைந்து விடுகின்றனவே! இது என்ன விந்தை? வாழ்க்கையிலிருந்து மலர்கின்ற காதலும் அப்படித்தானே!

* * * * *

கடலின் கொந்தளிப்பை அளக்கின்ற சந்திரன் போல, பெண்ணின் கண்களில் மலர்கின்ற கேள்விகள் அனைத்தும், ஆண்மையின் உணர்ச்சிக் கடலையே அளக்க முன் வருகின்றன.

தலைவியின் முன், தலைவன் தன் அந்தரங்கத்தையே களங்கமின்றி எடுத்துரைப்பதால், தலைவியின் மனம் தடுமாறிப் பின்வாங்குகிறது;

தலைவன் கூறுகிறான் :

ஒரு ரத்னமாக இருந்தாலும், அதைத் துண்டு துண்டாக உடைத்து, உன் கழுத்துக்கு ஒரு முத்தாரம் செய்து தந்துவிடுவேன்;

ஒரு சின்னஞ்சிறு மலராக இருந்தாலும், அதை உடனே செடியிலிருந்து கிள்ளி எடுத்து, உனது கூந்தலில் செருகி அலங்கரிப்பேன்;

ஆனால், எனது இதயம், ஒரு ரத்னமுமல்ல, சின்னஞ்சிறு மலருமல்லவே, நான என் செய்வது?

எனது இதயத்தின் ஆழத்தையோ, கரையையோ கண்டுபிடிக்க முடியவில்லையே? எனது இதய ராணியாகவே நீ மாறும்வரை, எனது இதயத்தின் ஆழத்தைக் கண்டறிய முடியாதுதானே! அது ஒரு நிமிஷ இன்ப வெறியாக இருந்தாலும், அது ஒரு இனிய புன்முறுவலில் மலர்ந்துவிடும்; அந்த நிமிஷமே, இந்த விந்தையை நீ கண்டு கொள்வாயல்லவா?

அது ஒரு துன்பத் துடிப்பாக இருந்தாலும், அது ஒரு தெளிந்த கண்ணீர்வெள்ளமாகப் பெருக்கெடுத்தோடும்; கண்ணீர்த்துளியிலே, இதய ரகசியம் பாஷையின் துணையின்றியே துடித்து மேலே நிற்குமல்லவா?

ஆனால், இது காதல், காதல், காதல்; காதல் உலகிலே, இன்பமும் துன்பமும் எல்லையற்ற நிலையில் கொந்தளிக்கும் அல்லவா? காதலின் தேவையும், எல்லை கடந்தது; காதலுக்குச் செல்வமும் தேவைதான்!

காதல் உனது வாழ்க்கையை ஒட்டிப் படர்ந்திருக்கிறது; பிரிக்கமுடியாத இன்ப-துன்பக் கடல், காதல் உலகம்!

* * * * *

காதலியே! உனது பாடலின் பொருள் என்ன? என்னிடம்நேராகவே மௌனத்தை ஒழித்துவிட்டுப் பேசத் தொடங்குவாயாக!

— V. R. M.

# காதல் கண்கள்

## 1

வேலைக்காரன் : எனது ராணியே! தங்கள் வேலைக்காரனிடம், கருணை காட்டுங்கள்.

ராணி : சபை கலைந்தது. எனது வேலைக்காரர்கள் எல்லோரும் போய்விட்டார்கள். ஏன் இவ்வளவு அகால நேரத்தில் நீ வந்திருக்கிறாய்?

வேலைக்காரன் : மற்றவர்களுடைய வேலைகள் எல்லாம் முடிந்தபின்தானே, என்னுடைய வேலை ஆரம்பமாகிறது. இறுதியில் இன்னும் வேலை பாக்கியிருந்தால், நான் அதைச் செய்யவே தங்கள் அனுமதி கேட்கிறேன்.

ராணி : இவ்வளவு அகால நேரத்தில், நீ எதை எதிர்பார்க்க முடியும்?

வேலைக்காரன் : தங்கள் பூந்தோட்டத்திலே, என்னைத் தோட்டக்காரனாகச் செய்யலாம்.

ராணி : இதென்ன, அறிவீனம்?

வேலைக்காரன் : நான் என்னுடைய மற்ற வேலைகளை விட்டுவிடுகிறேன். எனது பட்டாக் கத்திகளையும் ஈட்டிகளையும் மண்ணில் எறிந்துவிடுகிறேன். தூரதேசத்திலுள்ள ராஜ்யங்களுக்கு என்னை அனுப்பாதீர்கள். புதிய நாடுகளைப் பிடிப்பதற்கு என்னை ஆக்ஞையிடாதீர்கள். தங்கள் பூந்தோட்டத்திலே, என்னைத் தோட்டக்காரனாகவே அமர்த்திவிடுங்கள்.

ராணி: அப்படியானல் உன் வேலைகள் என்ன?

வேலைக்காரன்: தங்களுடைய ஓய்வு நேரங்களில், தங்களுக்கு வேலை செய்கிறேன். தாங்கள் காலையில் நடந்துசெல்லும் புல் தரையைச் சுத்தமாக வைத்திருப்பேன்; தங்கள் பாதங்கள் பட்டு மடியக் காத்திருக்கும் மலர்கள், தங்கள் கால்களைப் புகழ்ந்து வரவேற்கும்.

'சப்தபர்ண' மரக்கிளைகளிலே, தங்களுக்கு நான் ஒரு ஊஞ்சல் கட்டி, அதில் தங்களை வைத்து ஆட்டி மகிழ்விப்பேன்; தாங்கள் ஊஞ்சலில் ஆடும்போது, அந்திமாலைச் சந்திரன், இலைகளின் வழியாக தங்கள் ஆடையின் முனைகளிலே முத்தமிடத் துடிக்கும்.

தங்கள் படுக்கை அறையில், வாசனை எண்ணெய் ஊற்றி விளக்கை எரியவிடுவேன், தங்கள் பாதபீடத்தில், மஞ்சளாலும், சந்தனத்தாலும் அருமையான கோலங்கள் போட்டு அலங்கரிப்பேன்.

ராணி: இதற்கெல்லாம், உனக்கென்ன வெகுமதி?

வேலைக்காரன்: மிருதுவான தாமரை மொட்டுக்கள் போன்ற தங்கள் இனிய மூடியகரங்களைப் பிடித்துக்கொள்ளவும், மணிக்கட்டுகளில் மலர் மாலைகளை நழுவ விடவும், தங்கள் உள்ளங்கால்களில் அசோக மலர்களின் செந்நிற. ரசத்தைத் தடவி வருணம் ஊட்டவும் உள்ளங்கால்களில் ஒதுங்கி நிற்கும் தூசியை முத்தமிட்டுத் துடைக்கவும், எனக்குத் தங்கள் அனுமதி வேண்டும்.

ராணி: எனது பணியாளே! உனது வேண்டுகோளை அனுமதித்துவிட்டேன். இன்று முதல் என் பூந்தோட்டத்திலே, நீயே தோட்டக்காரன்.

## 2

"ஆ, கவிஞனே! அந்திமாலை நெருங்குகிறது. உனது தலைமயிர் நரைத்து வெழுத்துவிட்டதே. உனது தனியான தியானத்திலே வருங்கால நிகழ்ச்சியும் உன் காதில் விழுகிறதா?"

கவிஞன் சொன்னான்: "ஆம் அந்தி நேரம், அகால நேரத்திலும்கூட, கிராமத்திலிருந்து யாராவது கூப்பிடுவார்கள், என்றுதான் நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன்,

"அலைகின்ற இரு இளம் இதயங்கள் சந்திக்கின்றனவா? இரண்டு ஜோடி ஆசைக் கண்கள் இசையின் மூலம் தங்கள் மௌனத்தை முறித்தெறியத் துடிக்கின்றனவா? என்றுதான் நான் கவனித்துக்கொண்டிருக்கிறேன்,

"வாழ்க்கையின் கரையிலே உட்கார்ந்துகொண்டு, மரணத்தையும் வருங்காலத்தையும் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருந்தால் அந்த இளங் காதலர்களின் ஆசை மண்டிய காதற் பாடல்களை என்னையன்றி வேறு யார் இனிமையாகப் பாடக்கூடும்?

"அந்தி நக்ஷத்திரம் மறைகிறது.

"நதியின் மௌனத்திலே, ஒரு பிரேத தகனத்திலே, சிதையின் தீ மெதுவாக அணைகிறது.

"நரிகள், கூட்டமாக ஊளையிடுகின்றன; சந்திரன் வெளுத்து மங்கி வரும்போது, மயான முற்றத்திலே, இந்த நரிக்கூட்டம் ஊளையிடுகிறது.

"யாராவது ஒரு வழிப்போக்கன், வீட்டைவிட்டு வெளியே வந்து, இருட்டிலே கவிந்த தலையுடன் இருண்ட ரகஸ்யத்தைக் கவனிக்க நேர்ந்தால், அவன் காதில் வாழ்க்கையின் இரகஸ்யங்களைக்கொட்டி முழக்குவதற்கு, வேறு யார் இருக்கிறார்கள்? நானா கதவைத் தாளிட்டுக்கொண்டு வாழ்க்கையின் பந்தங்களையே வெறுத்து விடுதலையடைய முயன்றால், இந்த இரகசியங்களை யெல்லாம் யார்தான் அவர்களுக்குச் சொல்லக்கூடும்?

"என் தலைமயிர் நரைத்திருப்பது ஒரு பெரிய காரியமல்லவே. சாதாரண விஷயம்தான்.

"இந்தக் கிராமத்திலுள்ள இளைஞர்களைப் போல், இளைஞனாகவும் இருக்கிறேன்; முதியவர்களைப்போல், கிழவனாகவும்தான் நான் இருக்கிறேன்.

"சிலர் புன்முறுவல் பூத்து நிற்கிறார்கள். எளிய இனிய முறையிலே சிரிக்கிறார்கள்! சிலருடைய கண்களிலே, தந்திரமும் விஷமமும் துடிக்கின்றன.

"பகலிலே, சிலருடைய விழிகளிலே, கண்ணீர் ததும்பிப் பெருக்கெடுத்தோடுகிறது; சிலருடைய கண்ணீர்த்துளிகள், இருட்டிலே ஒளிந்து மறைந்து நிற்கின்றன.

"எல்லோருக்கும் என்னைப்போன்ற கவிஞன் தேவையாக இருப்பதால், வருங்கால வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கவே எனக்கு நேரம் இல்லை.

"நான் எல்லோருடனும் சம வயதாக வளரும் போது, என் தலைமயிர் வெளுத்திருப்பதைப்பற்றி நான் கவலைப்படவில்லையே!"

## 3

காலையில், கடலில் என் வலையை வீசினேன்.

கடலின் இருண்ட ஆழத்திலிருந்து, விநோத அழகும் விநோதமான வடிவமும் உள்ள பண்டங்களை வெளியே இழுத்துக்கொண்டுவந்து விட்டேன்; சில புன்முறுவல்போல ஒளிவீசின, சில கண்ணீர்த் துளிகள்போல மின்னின, சில மணப்பெண்ணின் கன்னங்கள்போல நாணத்தால் சிவந்து நின்றன.

நான் இந்தச் சுமையுடன் வீடு சேர்ந்ததும், ஒரு மலரின் இதழ்களைப் பிய்த்துக்கொண்டு, சோம்பேறித்தனமாக தோட்டத்தில் என்காதலி உட்கார்ந்திருந்தாள்.

நான் ஒரு நிமிஷம் தயங்கி நின்றேன்; பின்னர் நான் கடலில் சேகரித்த பண்டங்களை யெல்லாம் அவள் காலடியில் வைத்துவிட்டு, மௌனமாய் நின்றேன்.

பண்டங்களைப் பார்த்தபின் அவள் கேட்டாள்: "இதென்ன, புதுமாதிரியான பொருள்களாக இருக்கின்றனவே?"

நான் வெட்கித் தலைகுனிந்து சிந்தித்தேன்: "நான் இதற்காக எந்தப் போராட்டமும் செய்ய வில்லை; சந்தையிலும் இவைகளை வாங்கவில்லை; ஆனால், என் காதலிக்குப் பரிசளிக்கக்கூடியபண்டங் கள் அல்லவே!"

பின், அன்று இரவு முழுதும், அவைகளை ஒவ் வொன்ருய் வீதியில் எறிந்தேன்.

காலையில் பிரயாணிகள் வந்து அவைகளைப் பொறுக்கிக்கொண்டு, தூரதேசங்களுக்கே கொண்டு சென்ருர்கள்.

## 4

பட்டணத்தில் சந்தைக்குப்போகும் வீதியில், என் வீட்டை, ஐயோ!, ஏன் கட்டினுர்கள்?

சாமான் ஏற்றிய படகுகளை, என் மரங்களுக்குச் சமீபத்தில் அவர்கள் நங்கூரம் போட்டுக் கட்டிவிடு கிருர்களே.

அவர்கள் இஷ்டம்போல் வருவதும் போவதும் அலைவதுமாய் இருக்கிருர்கள்.

நான் உட்கார்ந்துகொண்டே அவர்களை கவனிக் கிறேன்; எனது காலம் கரைந்தேபோகிறது.

அவர்களை என்னல் விரட்டமுடியவில்லையே. இப்படியே, எனது நாட்கள் கழிகின்றனவே.

இரவும் பகலும் அவர்கள் காலடி ஓசைகள், என் கதவின் முன் கேட்கின்றனவே.

வீணாகவே நான் கதறுகிறேன்; "உங்களை எனக்குத் தெரியாதே?"

சிலர் என்னுடைய விரல்களுக்கு அறிமுகமானவர்கள்; சிலர் என்னுடைய நாசித்துவாரங்களுக்குத் தெரிந்தவர்கள்; என் நரம்பில் ஓடும் இரத்தத்துக்கே அவர்களைத் தெரியும்; என் கனவுகளுக்கு அறிமுகமானவர்கள் சிலர்.

அவர்களை என்னால் விரட்டமுடியவில்லையே! அவர்களைக் கண்டதும் நானே சொல்லுகிறேன்: "யார் வேண்டுமானாலும், என் வீட்டுக்கு வரலாம். ஆம், வரலாம்."

காலையில் கோவிலில் மணி அடிக்கிறது. அவர்கள், கைகளில் கூடையேந்தி வருகிறார்கள். அவர்களுடைய பாதங்கள் ரோஜா மலர்போல் சிவந்திருக்கின்றன. அருணோதய ஒளி அவர்கள் முகங்களில் பாவி நிற்கிறது.

அவர்களை என்னால் விரட்டமுடியவில்லையே! நானே அவர்களை அழைத்துச் சொல்கிறேன்; "என் பூந்தோட்டத்துக்கு வந்து, மலர்களைப் பறித்துக் கொண்டு போகலாம். இங்கு வாருங்கள்."

நடுப்பகலில், அரண்மனை வாயிலிலே, சேகண்டி ஒலிக்கிறது.

அவர்கள் ஏன் வேலையை விட்டு விட்டு எனது வேலியண்டை தங்கி நிற்கிறார்கள் என்று தெரியவில்லையே?

அவர்கள் கூந்தலில் உள்ள மலர்கள், வெளுத்துக் கருகிவிட்டன; அவர்கள் புல்லாங்குழலிலே, சுவரம் மங்கிவிட்டதே!

அவர்களை என்னால் விரட்டமுடியவில்லையே?

அவர்களை நானே அழைத்துச் சொல்கிறேன்: "என் மரங்களின் கீழ் நிழல் குளிர்ச்சியாக இருக்கிறது; நண்பர்களே, வாருங்கள்."

இரவின் இருட்டிலே, சிள்வண்டுகள் காட்டிலே கீச்சிடுகின்றன.

மெதுவாக என் கதவண்டை நடந்து வந்து, அமைதியாகக் கதவைத் தட்டுவது யார்?

அந்த முகம் எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை, ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை, ஆகாசத்தின் மௌனம் எங்கும் சூழ்ந்திருக்கிறது. இந்த மௌன விருந்தாளியை, திருப்பியனுப்ப எனக்கு மனோதிடமில்லை. இருட்டிலே, அந்த முகத்தை உற்று நோக்கினேன்; பல மணி நேரங்களில் கனவுகள் கலைந்து மறைந்தன.

## 5

நான் அமைதியற்றுத் துடிக்கிறேன். எட்டியுள்ள பொருள்களைத்தேடி அவாவுற்று நிற்கிறேன்

மங்கிய தூரத்தின் விளிம்பைத் தொடவே ஆசைகொண்டு, என் ஆன்மா வெளியேபோகிறது.

ஓ, எட்டியே நிற்கும் பரம்பொருளே! உனது குழலில் நாதம் கூர்மையாகவே அழைக்கிறது!

இங்கேயே நான் கட்டப்பட்டிருக்கிறேன் என்பதையும் பறந்துவர சிறகு இல்லை என்பதையும் நான் அடிக்கடி மறந்துவிடுகிறேன்.

நான் விழிப்புற்று ஆசைக் கனவோடு நிற்கிறேன். அன்னிய நாட்டிலே, நான் ஒரு அன்னியன் தான்.

நிறைவேற்றமுடியாத நம்பிக்கையைக்கொண்டு, நீ என்னிடம் இரகசியம் பேசுகிறாய்.

உனது நாவினின்று எழுகின்ற நாதம், என் இதயத்தின் சொந்தக்குரலாகவே ஒலிக்கின்றது.

ஓ, காண்பதற்கரிதான பரம்பொருளே! உனது நாத ஒலி குழலினின்று பீறிட்டுப் பரவி வருகிறது!

எனக்கு வழியே தெரியவில்லையே, பறந்துவரச் சிறகுள்ள குதிரையும் என்னிடம் இல்லையே என்பதையும், நான் அடிக்கடி மறந்தே போகிறேன்!

நான் எதையும் கவனியாமல், பற்றில்லாமல், என் இதயத்தினுள்ளே அலைந்து கொண்டிருக்கிறேன்.

மங்கலான பகல் நேரத்தில், மந்தமாக ஓடும் நிலையிலே, விண்ணிலே நீல விதானத்திலே, உனது அகண்ட தோற்றம் என்ன வடிவம் எடுக்கிறது?

ஓ, எட்டாத கோடியே! உனது குழல், கூர்மையாகவே என் காதில் ஒலிக்கின்றதே! நான் தனியாக வாழ்கின்ற வீட்டிலே, சுற்றியுள்ள கதவுகள் மூடப்

பட்டிருக்கின்றன, என்பதையும் நான் எப்போதுமே மறந்துவிடுகிறேனே!

## 6

பழகிய பட்சி கூண்டில் இருந்தது, சுதந்திரப் பட்சி காட்டிலே இருந்தது.

காலக்கிரமத்தில், விதியின் ஆக்ஞைப்படி, இரண்டும் சந்தித்தன.

காட்டுப் பட்சி சொல்கிறது: "ஓ, எனது காதலியே, நாம் காட்டுக்கே பறந்து போய் விடுவோம்!"

கூண்டுப் பட்சி பதிலிறுத்தது: "இங்கேயே நீயும் வந்துவிடு. நாம் இருவரும் இந்தக் கூண்டிலேயே வசிக்கலாம்."

காட்டுப் பட்சி சொன்னது: "சிறைக் கம்பிகளினூடே, இறக்கைகளை விரிக்கவே இடமில்லையே!"

கூண்டுப் பட்சி சொல்கிறது: '. ஐயோ! ஆகாசத்தில் எப்படி நான் உட்கார்ந்துகொள்வது என்பதே எனக்குத் தெரியாதே.!"

காட்டுப் பட்சி சொல்கிறது: "எனது அன்பே! கானகீதங்களை இசைப்பாயாக!"

கூண்டுப் பட்சி பதிலிறுக்கிறது: "அருகே உட்கார்ந்து கொள். படித்தவர்களின் பேச்சையே நான் உனக்குக் கற்றுக்கொடுக்கிறேன்."

காட்டுப் பட்சி சொல்கிறது: "இல்லை ஐயோ! இல்லை! பாடல்களைக் கற்றுக்கொடுக்க முடியுமா? ஒருபோதும் முடியவே முடியாதே!"

கூண்டுப் பட்சி சொல்கிறது: "ஐயோ, என் செய்வேன்! எனக்குக் கானக கீதங்களே தெரியாதே!"

அவர்களுடைய காதல், ஆசை வெறியில் கொந்தளித்தது. ஆனால் இரண்டும், ஒன்று சேர்ந்து சிறகோடு சிறகாக ஒருபோதும் பறக்கப் போவதில்லை.

கூண்டுக் கம்பிகளின் வழியாக, இரண்டு பட்சிகளும் ஒன்றை யொன்று ஆசையோடு பார்க்கின்றன; ஆனால் ஒருவரையொருவர் உண்மையாகவே கலந்து தெரிந்துகொள்ள முடியவில்லை. அவர்கள் எண்ணம் வீணானது.

ஆசையோடு சிறகடித்துக்கொண்டு, நெருங்கி, "என் அன்பே, இன்னும் நெருங்கி வருக என்று பாடுகின்றன.

காட்டுப் பட்சி சொல்லுகிறது: "ஐயோ, மூடிய கதவுகளைக்கண்டு நான் அஞ்சுகிறேன்."

கூண்டுப் பட்சி இரகசியமாய் பதிலிறுக்கிறது: "ஐயோ! என் இறக்கைகள், வலியிழந்து உணர்ச்சியற்றுப் போயினவே."

## 7

ஓ, அம்மா! இளவரசன் நம்ம வீட்டுப் பக்கமா கத்தான் போகப் போகிருன்—இன்று காலை நான் எப்படி என் வேலையைக் கவனிக்க முடியும்?

எப்படி நான் தலையைப் பின்னிக்கொள்ள வேண்டுமென்றும், எனக்குக் காட்டிக்கொடு அம்மா?

என்னை, ஏதோ ஒரு மாதிரியாக ஆச்சரியத் தோடு பார்க்கிறியே.

என் ஜன்னல் வழியே இளவரசன் ஒருமுறை கூட எட்டிப்பார்க்கமாட்டான் என்பதும் எனக்குத் தெரியும். கண்மூடிக் கண் திறப்பதற்குள்ளேயே, அவன் மின்னல்போல என் கண் பார்வையினின்றே மறைந்துவிடுவானென்பதும் எனக்குத் தெரியும். எட்டியிருந்து, குழலின் மறைகின்ற நாதம்தான் தத் தளித்துக்கொண்டே என் காதில் விழும்.

ஆனாலும், இளவரசன் நமது கதவண்டை போவான்; இந்த நேரம் எனது நயமான ஆடை யில் நான் என்னையே அலங்கரித்துக் கொள்ளு கிறேன்.

ஓ, அம்மா! நமது கதவண்டை இளவரசன் சென்ருன்; காலைச் சூரியன், அவன் இரதத்திலி ருந்து மின்னொளி வீசியது.

நான் என் முகத்திலிருந்து கோஷாத்திரையை விலக்கிக்கொண்டும், என் கழுத்திலிருந்து இரத்தி

னம் இழைத்த சங்கிலியைக் கழட்டி அவன் பாதையில் வெறியோடு எறிந்தேன்.

ஏன், அம்மா இப்படி என்னை வெறித்துப் பார்க்கிறாய்?

என் சங்கிலியை அவன் எடுக்கவில்லை என்பதும் எனக்குத் தெரியும். இரதத்தின் சக்கரங்களிலே தூளாக்கப்பட்ட சங்கிலி, பாதையிலே ஒரு செந்நிறப் புள்ளியை விட்டுச்சென்றது. நான் யாருக்கு எதை அன்பளிப்பாக வீசி எறிந்தேன், என்பதும் ஒருவருக்கும் தெரியாது, அம்மா!

ஆனால், இளவரசன் நமது கதவண்டை சென்றான்; அவன் பாதையிலே மின்னும்படி, என் மார்பிலிருந்த நகையைத் தூக்கி எறிந்தேன்.

## 8

நான் தூங்கும்போது, எனது படுக்கை அருகே இருந்த விளக்கு அணைந்துபோனபோது, 'காலைப் பட்சிகளோடு நானும் எழுந்துவிட்டேன்.

எனது பின்னாத தலையிலே, ஒரு புதிய மலர் மாலையை அணிந்துகொண்டு எனது திறந்த ஜன்னலண்டை உட்கார்ந்திருந்தேன்,

அருணோதயம் ரோஜா மலர்போல மூடுபனியிலே மூழ்கியிருக்கும்போது, இளவரசன் வீதி வழியே சென்றான்.

அவன் கழுத்திலே ஒரு முத்துமாலை கிடந்தது; சூரியக் கதிர்கள், அவன் கிரீடத்திலே வீழ்ந்தன; என் கதவண்டை நின்றுகொண்டு, ஆசைக் குரலிலே கேட்டான், "எங்கே அவள் ?"

நாணத்தால், "நான்தான் அவள், நான்தான் அவள்!" என்று என்னால் சொல்ல நாவெழவில்லை.

அந்தி நேரம். விளக்கு இன்னும் ஏற்றப்படவில்லை.

நான் அலட்சியமாக, ஜடை பின்னிக்கொண்டிருந்தேன்.

சூரியன அஸ்தமிக்கும் நேரம், இளவரசன் இரதத்தில் வந்தான்.

வேகமாக வந்த அவன் குதிரைகள், வாயிலே நுரை தள்ளின; அவன் ஆடையிலே தூசிபடிந்திருந்தது.

அவன் என் கதவண்டை இறங்கி, களைத்த குரலிலே, "அவள் எங்கே?" என்று கேட்டான்.

வெட்கம் தாங்கமுடியாமல், "அவள்தான் நான், அவள்தான் நான்," என்று என்னால் சொல்லவே முடியவில்லை.

அன்று சித்திரை இரவு. என் அறையிலே விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

தென்றல் மெதுவாக வீசியது. பேசும் கிளி கூண்டில் தூங்கியது. எனது ரவிக்கை, மயிலின்

தொண்டை நிறத்தில் உள்ளது; எனது மேலங்கியும் ஆடையும் இளம்புல் நிறத்தில் பச்சையாகவே இருந்தது.

ஜன்னலண்டை தரையில் உட்கார்ந்துகொண்டு ஜனநடமாட்டமில்லாத காலி வீதியைக் கண்கொட்டாமல் கவனித்துக் கொண்டிருந்தேன்.

இருண்ட இரவிலே நான், இனிமையாகப் பாடிக் கொண்டிருந்தேன், "கவலையுற்ற பிரயாணியே! அவளே நான், அவளே நான்!"

೨

காதல் சந்திப்புக்கு, நான் தனியே இரவில் செல்லும்போது, பட்சிகள் பாடுவதில்லை; காற்று அசைவதில்லை; வீதியின் இருமருங்கிலும் உள்ள வீடுகள், மௌனமாகவே நிசப்தமாக இருக்கும்.

நான் நடந்து செல்லும்போது, எனது கால் சதங்கைகள்தான் அடிக்கடி உரத்து ஒலித்துக் கொண்டிருக்கும். எனக்கே, இதை நினைத்தால், வெட்கமாயிருக்கும்.

நான் வராந்தாவிலே உட்கார்ந்து கொண்டு, அவன் காலடியோசைகளையே கவனித்துக்கொண்டிருக்கும்போது, மரங்களில் இலைகள்கூட சலசலப்பதில்லை; தூங்கும் காவலாளியின் முழங்காலில் சாய்ந்திருக்கும் பட்டாக்கத்திபோல, ஆற்றிலே தண்ணீர் அமைதியாக இருக்கும்.

எனது இதயம்தான் கொடுமையாகவே ஆவேசத்தோடு துடித்துக்கொண்டிருக்கும்; என் இதயத் துடிப்பை அடக்க எனக்கே வழி தெரியவில்லையே!

எனது காதலன் என் அருகேவந்து உட்கார்ந்து கொண்டிருக்கும்போது, எனது உடலே உணர்ச்சியால் துடிக்கும்போது, எனது கண் இதழ்கள் மூடிக் கொள்ளும்போது, இரவு இருண்டே போகிறது; காற்று விளக்கையே அணைத்து விடுகிறது; மேகங்கள், நட்சத்திரங்களையே திரையிட்டு மறைக்கின்றன.

எனது மார்பிலே, மின்னுகின்ற நகை ஒன்று தான் ஒளிவீசுகிறது. இதையும் எப்படி மறைப்பதென்று எனக்குத் தெரியவில்லையே!

## 10

மணப் பெண்ணே! கவனிப்பாயாக! விருந்தாளி வந்துவிட்டான்.

உன் கதவைத் தாளிட்டிருக்கும் சங்கிலியை அவன் அமைதியாக அசைக்கிறான். உன் காதில் விழுகிறதா?

உனது கால்சதங்கைகள் அதிகமாக ஓசையிடா வண்ணம் கவனித்துக்கொள்; அவனை நீ ஆசையின் அதிர்ச்சியால் சந்திக்க அவசரப்பட்டதாகக் காட்டிக் கொள்ளாதே!

நிதானமாவே நடந்துகொள், பெண்ணே! விருந்தாளி அந்தி மாலையில் வந்திருக்கிறான்.

இல்லை, அது ஒரு பேய்க்காற்றின் அதிர்ச்சி யல்ல! நீ மனங்கலங்காதே, பெண்ணே!

சித்திரை இரவிலே, பூர்ணநிலவுதான்! முற்றத் திலே, நிழல்கள் வெளித்தோன்றுகின்றன. தலைக்கு மேல், ஆகாசம் ஒளிமண்டிக் கிடக்கிறது.

முகத்திரையை இழுத்து மூடிக்கொண்டு, உனக்கு பயமாக இருந்தால், விளக்கை யெடுத்துக் கொண்டு கதவண்டை போய்ப்பார்.

உனக்கு கூச்சமாக இருந்தால், நீ விருந்தாளி யோடு பேசவேண்டாம்; நீ அவனைச்சந்திக்கும்போது சற்று கதவுக்குப்பின் மறைந்து நில்.

அவன் உன்னை ஏதாவது கேள்விகள் கேட்டால் உனக்கு பதில்சொல்ல விருப்பமிருந்தால், மௌன மாகவே நீ உனது விழிகளைக் கீழே நாணத்துடன் தாழ்த்திக்கொள்வாயாக.

கையில் விளக்குடன், நீ அவனை உள்ளே அழைத்துச் செல்லும்போது, உனது கை வளையல் கள் ஓசையிடாவண்ணம் கவனித்துக்கொள்வாயாக.

நாணம் உன்னைச் சூழ்ந்துகொண்டால், நீ அவ னிடம் ஒரு வார்த்தைகூடப் பேசவேண்டியதே இல்லை.

மணப்பெண்ணே! உனது வேலையெல்லாம் முடிந்துவிட்டதா? கவனி, விருந்தாளி வந்து விட்டான்.

மாட்டுக்கொட்டிலில் நீ விளக்கை ஏற்றிவிட் டாயா?

அந்திப் பூசைக்கு பூக்குடலையைத் தயாரித்து விட்டாயா?

நெற்றியிலே கூந்தலின் மத்தியிலே, திலகமிட்டுக்கொண்டாயா? இரவுக்கு வேண்டிய அலங்காரம் எல்லாம் செய்து கொண்டுவிட்டாயா!

ஓ, மணப்பெண்ணே! விருந்தாளி வந்துவிட்டான்! உன் வேலையைக் கவனி, சரியா!

## 11

நீ இருக்கிறபடியே வா, சிங்காரித்துக்கொள்வதில் பொழுதைப் போக்காதே.

உனது பின்னிய ஜடை தளர்ந்திருந்தாலும், உனது கூந்தல் வகிடு நேரே செல்லாவிட்டாலும், உனது ரவிக்கையின் ரிப்பன் தளர்ந்திருந்தாலும், நீ அதையெல்லாம் பொருட்படுத்த வேண்டாம்.

நீ இருக்கிறபடியே வா! அலங்காரத்தில் வீண் கால தாமதம் செய்யாதே.

புல்லின்மேல் வேகமாகவே நடந்து வா. பனி காரணமாக உனது பாதங்களிலிருந்து மருதாணி வருணம் கலைந்தாலும், உனது கால் சதங்கையின் மணிகள் மெதுவாக ஒலித்தாலும், உனது கழுத்துச் சங்கிலியிலிருந்து முத்துக்கள் உதிர்ந்தே விழுந்தாலும், நீ அவைகளை யெல்லாம் பொருட்படுத்தக் கூடாது.

புல்லின்மேல் வேகமாய் நடந்து வா. ஆகாசத்தை மூடி மறைக்கின்ற மேகங்களை நீ பார்க்கின்றாயா?

எட்டியுள்ள ஆற்றின் மறுகரையிலிருந்து கொக்குக் கூட்டங்கள் மேலே பறந்துசெல்கின்றன. புல்லடர்ந்த வெளியிலே, புயல் காற்று மாறி மாறி அடிக்கிறது.

கவலையுள்ள ஆடு மாடுகள், கிராமத்திலுள்ள தங்கள் கொட்டிலை நோக்கியே ஓடுகின்றன.

ஆகாசத்தை மேகங்கள் மூடிவருவதை நீ காண்கின்றாய்?

வீணாகவே, நீ சிங்காரித்துக் கொள்வதற்கு விளக்கை ஏற்றுகிறாய்—அது துடித்துக் காற்றில் அணைந்தே போகிறது.

உனது கண்ணிதழ்களிலே,புகைக்கரிபடவில்லையென்று யாரால் சொல்லமுடியும்? ஏனென்றால், உனது கண்கள், மழை மேகங்களைவிடக் கறுப்பாயிருக்கின்றனவே.

வீணாகவே, நீ சிங்காரித்துக்கொள்ள விளக்கை ஏற்றுகிறாய்—அதுவும் அணைந்தே போகிறது.

நீ இருக்கிறபடியே வா; சிங்காரித்துக்கொள்வதில் காலத்தை வீணாக்காதே.

நீ மலர் மாலையை ஜடையில் அணிந்துகொள்ளாததற்காக யார் கவலைப்படுகிறார்கள்; கைச் சங்கிலி வளையல் அணிந்துகொள்ளாததனால், என்ன வந்துவிடப்போகிறது. பரவாயில்லை.

ஆகாசத்தில் மேகங்கள் எங்கும் பரவிவிட்டன, அகாலமாகி விட்டது.

நீ நிற்கிறபடியே வா; சிங்காரித்துக்கொள்ள வேண்டுமே என்று தயங்கி நிற்காதே.

## 12

நீ சுறு சுறுப்பாகப் பானையில் தண்ணீர் நிரப்ப வேண்டுமானால், ஓ! எனது ஏரிக்கு வந்துவிடு.

உனது பாதங்களைச் சுற்றி, தண்ணீர் வளைத்துக்கொண்டு அதன் இரகசியத்தையே உன்னிடம் சொல்லிவிடும்.

வருகின்ற மழையின் சாயை, மணலிலே தெரிகிறது.

உனது புருவங்களின்மேல் உள்ள நெருங்கிய ரோம வரிசைபோல, மரங்களின் மேல் மேகங்கள் கீழே படிந்து நிற்கின்றன.

உனது கால் சதங்கையொலி என் இதயத்திலே பாய்கிறது.

உனது பானையில் நீர்நிரப்ப வேண்டுமானால், நீ என் ஏரிக்கே வந்துவிடு.

நீ அலட்சியமாகவும், சோம்பேறித்தனமாகவும் உனது பானையை தண்ணீரில் மிதக்கவிட வேண்டுமானால், ஓ! எனது ஏரிக்கே வந்துவிடலாம்.

புல்தளம் பச்சையாக இருக்கிறது; அதிசயமான காட்டுமலர்கள் அபரிமிதமாகவே இருக்கின்றன.

கூட்டைவிட்டுப் பறந்தே செல்லும் புள்ளினங்கள் போல உனது சிந்தனைகளும் உனது கருவிழிகளிலிருந்து பறந்தே செல்லும்.

உனது முகமூடியும் காலடியிலே விழுந்துவிடும்.

தமாஷாகப் பொழுது போக்க வேண்டுமானால், என் ஏரிக்கே நீயும் வந்துவிடலாமே!

நீ உனது விளையாட்டை விட்டுவிட்டு, தண்ணீரில் மூழ்கி விளையாட விரும்பினால், ஓ! எனது ஏரிக்கே வந்துவிடலாம்!

உனது நீலத் தாவணியை ஏரியின் கரையிலே போட்டுவிடு; அங்கேயே அது கிடக்கட்டும்; நீல நிறமுள்ள தண்ணீர் உன் உடலையே மூடிமறைத்துக் கொள்ளும்.

அலைகள் உன் கழுத்தை முத்தமிட ஆவலாக நின்று, உன் செவிகளிலே இரகசியம் பேசும்.

தண்ணீரில் மூழ்க வேண்டுமானால், நீ எனது ஏரிக்கே வந்துவிடலாம்.

நீ பித்துப்பிடித்து, தண்ணீரில் குதித்துச் சாகத் துணிந்தால், எனது ஏரிக்கே வந்துவிடு.

தண்ணீர் குளிர்ச்சியாகவும், அளக்க முடியாத ஆழமாகவும் இருக்கிறது.

கனவற்ற தூக்கம்போல, தண்ணீர் இருண்டிருக்கிறது.

நீரின் ஆழத்திலே, இரவும் பகலும் ஒன்றுதான்; பாடல்களும் மௌனமும் ஒன்றேதான்.

நீ மரணத்தில் குதிக்கத் துணிந்துவிட்டால், நீ என் எரிக்கே வந்துவிடலாம்.

## 13

நான் ஒன்றும் கேட்கவில்லை. மரத்தின் பின்னல் வெட்டிய மரத் துண்டின் ஓரத்தில்தான் நின்றேன்.

அருணோதயத்தின் கண்களில், சோர்வு தெரிந்தது. காற்றிலே பனி பரவியிருந்தது.

பூமியின் மேலுள்ள மூடுபனியிலே, ஈரப்புல்லின் மந்தமான மணம் தொங்கிக்கொண்டிருந்தது.

ஆலமரத்தின கீழ், மிருதுவான புதிய வெண்ணெய் போன்ற உனது கைகளால், பசுவைப் பால் கறந்துகொண்டிருந்தாய்.

நானும் மௌனமாகவே நின்று கொண்டிருந்தேன்.

நான் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. புதரிலிருந்து, அந்தப் பட்சிதான் பாடிக் கொண்டே இருந்தது.

கிராம வீதியிலே, அந்த மாமரம் தனது மலர்களைச் சிந்திக் கொண்டிருந்தது, தேனீக்கள் ஒன்றன் பின் ஒன்றாக ரீங்காரமிட்டுக் கொண்டு வந்தன.

குளத்தின் பக்கமாக சிவன் கோவில் கதவு திறக்கப்பட்டது; ஆராதிப்பவன், மந்திரத்தை இசையோடு உச்சாடனம் செய்தான்.

உன் தொடையின்மேல் பாத்திரத்தைவைத்துக் கொண்டு நீ பசுவைப் பால் கறந்துகொண்டிருந்தாய்.

நான் உன்னிடம் நெருங்கி வரவில்லை. கோயில் மணியடிக்கும்போது, ஆகாசமே விழிப்புற்றது.

வீதியிலே ஆடு மாடுகளை ஓட்டிச் செல்வதால், குளம்புகளினின்று தூசி கிளம்பியது.

இடுப்பில் நிறைந்த தண்ணீர்ப் பானைகளுடன், பெண்கள் ஆற்றிலிருந்து வந்தார்கள்.

உனது வளையல்கள் ஒலித்துக் கொண்டிருந்தன; அந்த ஜாடியில், நுரை பொங்கி நின்றது.

காலையும் கழிந்தது. நானும் உன்னிடம் நெருங்கி வரவேயில்லை.

## 14

என்ன காரணம் என்றே தெரியாமல், நான்வீதி வழியே நடந்து சென்றேன். அப்போது பகல் பொழுது மறைந்தது. மூங்கில் கிளைகள், காற்றில் ஒன்றோடொன்று உராய்ந்தன.

ஓடும் ஒளியின் காலைச் சுற்றிச், சாய்ந்த நிழல்கள் கைகளை விரித்துக்கொண்டு பின் தொடர்ந்தன.

'கோயில்' பட்சிகள் பாடிப் பாடிக் களைத்துச் சலிப்படைந்தன.

நான் வீதி வழியே நடந்து சென்றேன்—எதற்காக நடந்தேன் என்று எனக்கே தெரியாது.

நீர் நிலையின் ஓரமாக உள்ள குடிசையின்மேல் ஒரு மரம் அகன்று விரிந்து நிழல் தந்தது.

யாரோ ஒரு பெண் தன் வேலையைச் சுறுசுறுப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தாள்; மூலையில் அவளுடைய வளையல்கள் இன்பமாக ஒலித்துக்கொண்டிருந்தன.

நான் இந்தக் குடிசையின் முன் நின்றேன் - ஏன் என்று என்னால் அறிந்துகொள்ள முடியவில்லை?

அந்தக் குறுகிய வீதி, பல கடுகு வயல்களையும் பல மாந்தோப்புக் காடுகளையும் தாண்டிச் செல்கிறது.

அந்தக் கிராமக் கோவில் வழியாகவும், ஆற்றங்கரைப் படியிலே சந்தைவழியாகவும் செல்கிறது.

நான் இந்தக் குடிசையின் முன் நின்றேன்; ஏன் என்று சொல்ல முடியவில்லை.

சில வருஷங்களுக்கு முன், பனிமிகுந்த பங்குனி தினத்தன்று, வசந்தம் போதையுடன் முணுமுணுத்துக் கொண்டிருந்தது; மாம் பூக்கள் மண்ணில் உதிர்ந்து கொண்டிருந்தன.

படிக்கட்டிலிருந்த பித்தளைப் பாத்திரத்தில், அலையடிக்கும் தண்ணீர் உள்ளே புகுந்து விளையாடியது.

அந்தப் பனி மிகுந்த பங்குனி தினத்தையே நினைத்துக் கொண்டிருக்கிறேன்;—ஏன் என்று சொல்ல முடியவில்லையே!

நிழல்கள் இருண்டு வருகின்றன. ஆடுமாடுகள் தொழுவத்துக்குத் திரும்புகின்றன.

புல்லிதழ்களின்மேல், ஒளி மங்கிப் பரவிக் கிடக்கிறது. ஆற்றங்கரையிலே, படகுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறார்கள், கிராம ஜனங்கள்.

நான் மெதுவாகவே வந்தவழியே திரும்புகிறேன்,—ஏன் என்று என்றால் அறிந்துகொள்ள முடியவில்லையே!

## 15

தன்னுடைய வாசனையால் பித்துப்பிடித்துக் காட்டிலே ஓடி அலைகின்ற மஸ்க் (கஸ்தூரி)—மான் போல, என் நிலைமை ஆகிவிட்டது; நானும் அது போலவே ஓடி அலைகிறேன்.

வைகாசியின் நள்ளிரவிலே, தென்றலும் வீசுகிறது.

நானும் வழியிழந்து அலைகிறேன்; என்றால் அடையமுடியாததையே நான் தேடி அலைகிறேன்; நான் தேடாத பொருளையே நான் அடைகிறேன்.

எனது ஆசையின் கனல் வடிவம், என் இதயத்திலிருந்து, வெளியே குதித்தோடியே 'டான்ஸ்' ஆடுகிறது.

பிரகாசிக்கின்ற மின்னுருவம் பறந்தோடுகிறது.

நான் அதை இறுகப்பிடித்துத் தழுவவே முயல்கிறேன்; ஆனால் அது எப்படியோ என் கைபி

னின்று தப்பியோடி, என்னையும் வழியிழந்து தவ ருன பாதையில் அலையும்படி செய்கிறது.

எனக்குக் கிடைக்காத பொருளையே நான் தேடு கிறேன்; நான் தேடாத பொருளே எனக்குக் கிடைக் கிறது.

## 16

கைகள், கைகளோடு ஒட்டிக்கொள்ளுகின்றன; கண்கள், கண்களில் கலந்து ஆசைக் கனலோடு அலைகின்றன;

அன்று பங்குனி நிலவு நிறைந்த இரவு; 'ஹென்னு' மலர் இனிமையைக் காற்றிலே வாரி இறைக்கிறது; எனது புல்லாங்குழல் மண்ணிலே தேடுவாரற்றுக் கிடக்கிறது; நீ தொடுக்கின்ற மலர் மாலையோ இன்னும் முடிந்தபாடில்லை.

உனக்கும் எனக்கும் மத்தியிலே தோன்றிய காதல், பாட்டைப்போல மிக எளிய முறையிலே அமைந்திருக்கிறது.

உனது மஞ்சள்நிற முகமூடி, எனது விழிக ளுக்கு விருந்தளித்துப் போதையைத் தூண்டிவிட் டது,

மூடித் திறந்து இன்பத்தையே கொடுத்து வாங்கும் இன்ப விளையாட்டல்லவா, இந்தக் காதல் விளையாட்டு? சில புன் முறுவல்கள், கொஞ்சம் சங் கோசம், நாணம், கலந்த சில இனிய பயனற்ற இத

யத் துடிப்புகளும், போராட்டங்களும்தானே இந்தக் காதல் விளையாட்டை அலங்கரிக்கின்றன.

நம்மிருவரிடையே தோன்றியிருக்கும் காதல், பாட்டைப்போல மிக எளிய முறையிலே தோன்றி யிருக்கிறது.

இந்த நிமிஷமே இந்த இன்பம்; இந்த அதிசய மர்மம், இதற்கு மேல் விரிவதில்லை, செய்யமுடியா ததை அடைய நாம் முயலவில்லை; இந்த இன்பத் திற்குப் பின் எந்தத் துன்பச் சாயையுமில்லை; இருட் டிலே வழிதெரியாமல் நாம் அலையவுமில்லை.

உனக்கும் எனக்கும் மத்தியில் தோன்றிய காதல், கவிதையைப்போல எளிய முறையிலே வில் லங்கமின்றி அமைந்திருக்கிறது.

## 17

அவர்களுடைய மரத்தில் உள்ள அந்த மஞ்சள் நிறப் பட்சி, பாடிக்கொண்டே என் இதயத்தில் இன்ப வெறியை ஊட்டியது, நான் குதித்தாடு கிறேன்.

நாங்கள் இருவரும் ஒரே கிராமத்தில்தான் வசிக் கிறோம்; இதுவே பேரானந்தம்தானே.

அவளுடைய அருமையான ஜோடி ஆட்டுக் குட்டிகள், எங்கள் வீட்டுத் தோட்டத்திலே, மரங்க ளின் நிழலிலே மேயவருகின்றன.

எங்கள் கோதுமை வயல்களுக்குள்ளே, அந்த ஆட்டுக்குட்டிகள் வழி தவறி வந்துவிட்டால், நான்

உடனே என் கைகளிலே அவைகளைத் தூக்கிக் கொள்ளுகிறேன்.

எங்கள் கிராமத்தின் பேர், காஞ்சனு; எங்கள் ஆற்றின் பேர், அஞ்சனு.

கிராமம் முழுதும், என் பேர் தெரியும்; அவளுடைய பேர் ரஞ்சனு.

எங்கள் இருவருக்கும் மத்தியில் ஒரே ஒரு வயல்தான்.

எங்கள் தோப்பிலே கூடுகட்டி வாழ்கின்ற தேனீக்கள், அவர்களுடைய தோப்பிலே தேன் தேடப் போகின்றன.

படிக்கட்டுகளிலே எறியப்படும் மலர்கள், நாங்கள் குளிக்கும் நதியிலே மிதந்தோடி, நெருங்கி வருகின்றன. அவர்களுடைய வயல்களிலிருந்து, காய்ந்த 'குஸ்ம்' மலர்க்கூடைகள், எங்கள் சந்தைக்கே வருகின்றன.

எங்கள கிராமத்தின் பேர், காஞ்சனு; எங்கள் நதியின் பேர், அஞ்சனு.

கிராமம் முழுதுமே என் பேர் தெரியும்; அவள் பேர் ரஞ்சனு.

அவர்கள் வீட்டுக்குப் போகின்ற சந்துப்பாதையிலே, வசந்த வனப்பிலே, மாம்பூக்கள் அருமையாகவே மணக்கும்.

அவர்களுடைய கொட்டை முத்து விதை பழுத்து அறுவடைக்குத் தயாராக இருக்கையில், எங்கள் வயலில் சணல்செடி மலர்ந்திருக்கும்.

அவர்கள் குடிசையிலே புன்முறுவல் பூத்து நிற்கின்ற நட்சத்திரங்களே, எங்களுக்கும் இன்ப ஒளியை வீசுகின்றன.

அவர்கள் குளத்தை நிரப்புகின்ற மழையே, எங்கள் 'காதல்' காட்டையும் இன்புற்றுச் செழிக்கச் செய்கிறது.

எங்கள் கிராமத்தின் பேர், காஞ்சனு: எங்கள் ஆற்றின் பேர், அஞ்சனு.

கிராமம் முழுதும் என்பேர் தெரியும்; அவள் பேர் ரஞ்சனு.

## 18

அந்த இருசகோதரிகளும் தண்ணீர்எடுக்கவரும் போது, இந்த இடத்துக்கே அவர்கள் வருவார்கள், புன்முறுவல் பூத்து நிற்பார்கள்.

அவர்கள் தண்ணீர் கொண்டுவரப் போகும் போது, மரத்தின் பின்னுல் யாரோ ஒருவன் ஒளிந்து நிற்பதும் அவர்களுக்கு நன்ருய்த் தெரியும்.

இந்தஇடம் தாண்டிச்செல்லும்போது, இரண்டு சகோதரிகளும் இரகசியம் பேசிக்கொள்கிருர்கள்.

தண்ணீர் கொண்டுவரப்போகும்போதெல்லாம், மரத்தின் பின் ஒரு ஆள் ஒளிந்து நிற்கிருன், என்ற இரகசியத்தை அவர்களே ஊகித்திருப்பார்கள்.

இந்த இடத்துக்கு வந்ததும், அவர்கள் பானை கள் புரளுகின்றன, தண்ணீர் சிதறி வழிந்தோடு கிறது.

தண்ணீர் கொண்டுவரப் போகும்போதெல்லாம் அந்த மரங்களின் பின் ஒளிந்து நிற்கின்ற மனிதனின் இதயம் துடித்துக்கொண்டிருக்கிறது, என்பதையும் அவர்கள் கண்டுபிடித்திருப்பார்கள்.

இந்த இடத்துக்கு வந்ததும், இரு சகோதரிகளும் ஒருவரை யொருவர் நுட்பமாக ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டு, புன்முறுவல் பூத்து நிற்கிறார்கள்.

அவர்கள் இருவரும் வேகமாக நடந்து செல்லும் போது, அவர்களுடைய சிரிப்பும் கேட்கிறது; தண்ணீர் கொண்டுவர அவர்கள் செல்லும்போது, மரங்களின் பின் நிற்கின்ற அந்த நூதன மனிதனின் மனத்திலே, அவர்களுடையசிரிப்பு ஒரு புதிய குழப்பத்தையே உண்டு பண்ணுகிறது.

## 19

நிறை குடத்தை இடுப்பில் வைத்துக்கொண்டு, நீ அந்த ஆற்றங்கரை வழியே நடந்து சென்றாய்.

ஏன் நீ வேகமாக உன் முகத்தைத் திருப்பிக் கொண்டு, அலைகின்ற உன் முகமூடிவழியாக என்னை ஆழமாக நோக்குகிறாய்?

அந்த உனது பொலிவுற்ற பார்வை, இருட்டிலிருந்து இளங்காற்றாகவே என்மேல் பரவி நின்றது; சுழித்தோடும் நீரிலே சுளிசென்று தைத்து, அதன் பின் நிழல் மண்டிய கரைக்கே செல்லும் இளங்காற்றுப்போல் இருந்தது, உனது மின்னல் பார்வை.

விளக்கில்லாத இருண்ட அறையிலே, திறந்த ஜன்னல் வழியாக அவசரமாக வந்து மறு ஜன்னல் வழியாக மறைந்து செல்லும் பறவைபோலவே, உனது பார்வை என்மேல் பரவிநின்றது.

குன்றுகளின் பின் தோன்றும் நட்சத்திரம் போல, நீ மறைந்து நிற்கின்ருய்; அந்த வீதிவழியே செல்கின்ற வழிப்போக்கன் போன்றவனே, நான்.

நிறைகுடம் இடுப்பில் தாங்கி ஆற்றங்கரை வழியே நீ நடந்து செல்லும்போது, உனது முகமூடி வழியாக ஏன் நீ ஒரு நிமிஷம் தயங்கி என் முகத்தை உற்று நோக்கினுய்?

## 20

தினந்தோறும் அவன் வருகிருன், போய்விடுகிருன்.

எனது சிநேகிதியே, என் கூந்தலிலிருந்து ஒரு மலரை உன்னிடம் தருகிறேன்; நீ அவனிடம் அந்த மலரைக் கொடு.

இந்த மலரை யார் அனுப்பியது என்று கேட்டால், நீ அவனிடம் என் பேரைச் சொல்லிவிடக்கூடாதென்று உன்னைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன்,—ஏனென்ருல், அவனே வருகிருன், வந்ததும் போய்விடுகிருன்.

மரத்தின்கிழ், மண்ணிலே அவன் உட்கார்ந்து கொள்ளுகிருன்.

எனது தோழியே, மலர்களாலும் இலைகளாலும் நீ அவனுக்கு ஒரு ஆசனம் விரித்துவைப்பாயாக.

அவனுடைய கண்களிலே, துன்பம் தொனிக்கிறது; இதைப் பார்த்ததும், என் இதயத்திலே துன்பம் மண்டிவிடுகிறது.

அவன் மனதில் உள்ளதை வாய்விட்டுப் பேசாமலே, வருவதும் போவதுமாயிருக்கிருன். என் செய்வது?

## 21

அருணோதயத்திலே, அந்த அலைகின்ற இளைஞன், ஏன் என் கதவண்டைவர விரும்பினுன்?

நான் உள்ளே போவதும் வருவதுமாயிருக்கும் போது, ஒவ்வொருதடவையும் அவனருகேயே போய் வருகிறேன்; அவனுடைய முகம் என் கண்களையே இழுக்கின்றதே!

நான் அவனுடன்பேசுவதா, அல்லது மௌனம் சாதிப்பதா, என்பதும் எனக்கே தெரியவில்லையே! என் கதவண்டை வர அவன் ஏன் விரும்பினுன்?

ஆடிமாத இரவுகள், மேகங்கள் நிறைந்தும், இருண்டும் இருக்கின்றன; கோடையிலே, ஆகாசம் மிருதுவான நீலவர்ணத்தோடுமின்னுகிறது; வசந்த நாட்கள், தென்றல் காற்றிலே ஓய்வற்றுத் துடிக்கின்றன.

ஒவ்வொரு நேரமும், அவன் புதியராகங்களிலே பாடல்களை நெய்கின்றான்.

நான் என் வேலையிலிருந்து திரும்பிப் பார்க்கும் போது, எனது கண்களிலே நீர்ததும்பி நிற்கிறது. என் கதவண்டைவர அவன் ஏன் ஆசைப்பட்டான்?

22

அவள் என் அருகே சென்றபோது, அவள் பாவாடையின் முனை என்னையே தொட்டுச்சென்றது.

ஒரு இதயத்தின் அறியாத் தீவிலிருந்து, திடீரென்று வசந்தத்தின் இன்பக் காற்றுக் குலுங்கிக் கொண்டே வந்துவிட்டது.

திடீரென்று தொட்டு மறையும் ஸ்பரிச இன்பம் என்னையே தொட்டுவிட்டது; உடனே மறைந்துவிட்டதே! இளங்காற்றிலே கிழித்தெறியப்பட்ட மலரின் இதழ் போலல்லவா, இந்த ஸ்பரிசம் நிகழ்ந்துவிட்டது.

அவள் உடலின் பெருமூச்சுப் போலவும், இதயத்தின் இரகசிய முணுமுணுப்புப் போலவும், இந்த ஸ்பரிச நிகழ்ச்சி என் நெஞ்சிலே பாய்ந்தது.

23

நீ ஏன் அங்கே உட்கார்ந்துகொண்டு, சோம்பேறித்தனமாக, விளையாடிக்கொண்டு உன் கை வளையல்களை ஒலிக்கின்றாய்?

உனது தண்ணீர்ப் பானையை நிரப்பு; நீ வீடு திரும்பும் நேரம் வந்துவிட்டதே.

உனது கைகளால் தண்ணீரைக் கிண்டிக் கொண்டு, சோம்பேறித்தனமாக, விளையாட்டாக, வீதியிலே யாரையோ எதிர்பார்ப்பதுபோல, மாறி மாறிக் கண்ணடிக்கின்றாயே?

உனது பானையை நிரப்பிக்கொண்டு, வீடு திரும்பிவிடு.

காலை மணிகள் ஓடுகின்றன: இருண்ட நீரும் ஓடியே செல்கிறது.

அலைகள் சிரிக்கின்றன; ஒன்றோடொன்று பொழுதுபோக்காகவே அலைகள் கலந்து இரகசியம் பேசுகின்றன.

ஆகாசத்தின் விளிம்பிலே, எட்டி எழுகின்ற நிலத்திலே,அலையும்மேகங்கள் குழுமி இருக்கின்றன.

வேலையின்றி பொழுதுபோக்காக, தமாஷாக மேகங்கள் அலைந்து தயங்கி உன் முகத்தையே பார்த்துப் புன்முறுவல் பூத்து நிற்கின்றன.

உனது பானையை நிரப்பிக்கொண்டு நீ வீடு திரும்பிவிடு.

## 24

உனது இதயரகசியத்தை என்னிடமே சொல்லி விடு, சிநேகிதியே!

அதை என்னிடம் எனக்கே சொல்லிவிடு.

நீ இவ்வளவு அருமையாகப் புன்முறுவல் பூத்து நிற்கின்றாய், உனது இதய ரகசியத்தையே என்னிடமே சொல்லிவிடு, தயங்கவே தயங்காதே; என் இதயமே அதைக்கேட்கும், என் காது கேட்காது.

இரவு இருண்டு ஆழமாகவே இருக்கிறது; வீடு நிசப்தமாகவே இருக்கிறது; பக்ஷிகளின் கூடுகளிலும் தூக்கம் மண்டிக்கிடக்கிறது.

உனது தயங்கும் கண்ணீர்த் துளிகளின் மூலமும், தயங்கும் புன்முறுவல்களின் மூலமும், இனிய நாணம் நிறைந்த துன்பத்தின் மூலமும் உனது இதய இரகசியத்தையே என்னிடம் பேசித் தீர்த்துவிடு.

## 25

"இளைஞனே! உனது கண்களில், ஏன் காதல் பித்து மண்டிக்கிடக்கிறதென்று எங்களிடம் வந்து சொல்லவும்."

"என் கண்களில் போதை மின்னும்படி, எந்தக் கஞ்சா மலரின் சாற்றைக் குடித்தேன், என்று என்னால் அறிந்துகொள்ள முடியவில்லையே!"

"ஆ வெட்கமில்லை !"

"சரி, சிலர் புத்திமான்கள், சிலர் அறிவிலிகள்; சிலர் ஜாக்கிரதையாகவும், சிலர் கவனக்குறைவாகவும் இருக்கிறார்கள். புன்முறுவல் பூத்து நிற்கும் கண்களும் உண்டு; அழுது வழியும் கண்களும்

உண்டு — அதனால்தான், என்விழிகள் பித்தேறி யிருக்கின்றன.''

'' இளைஞனே! அந்த மரத்தடி நிழலின் கீழ், நீ ஏன் மௌனமாகவே நிற்கின்றாய்?''

''என் இதயச் சுமையால், என் கால்கள் பலஹீனமாக நிழலிலே நிற்கின்றன.''

'' ஐயோ! வெட்கமில்லை!''

'' சரி, சிலர் வழிநெடுக நடந்து செல்கின்றார்கள்; சிலர் சுதந்திரமாக இருக்கிறார்கள்; சிலர் கட்டுண்டு நிற்கிறார்கள்—எனது கால்கள், இதயச் சுமையால் களைத்து நிற்கின்றன.'

## 26

''நீ அன்புடன் சம்மதித்துத் தருகின்ற பொருளையே, நான் எடுத்துக்கொள்ளுகிறேன். மேற்கொண்டு எதுவும் வேண்டுமென்று நான், உன்னைக் கெஞ்சிக் கேட்கவில்லை''.

''சரி சரி, நீ ஒரு சாந்தமான பிச்சைக்காரன், எனக்குத் தெரியும்; என்னிடம் இருப்பது அனைத்தையும் தானே நீ கேட்கிறாய்.''

''எனக்கு ஒரு தனிமலர் இருந்தால், நான் அதை என் இதயத்தில் சூடிக்கொள்வேன்.''

''ஆனால், முட்கள் இருந்தாலோ?''

''நான் அவைகளையும்பொறுத்துக்கொள்வேன்''

''சரி, சரி, சாந்தமான பிச்சைக்காரனே, நான்

உன்னை நன்கு அறிவேன்; என்னிடம் இருக்கும் அனைத்தையுமே நீ கேட்கிறாய்!''

"உனது அழகிய விழிகளை, என் முகத்துக்கு நேரே ஒரு முறை உயர்த்திக்காட்டினால், என் வாழ்க்கையே இன்பமாக, மரணத்தையும் தாண்டி-அமர நிலையடைந்துவிடும்."

"ஆனால் எனது கண்கள் கொடுமையாக இருந்தால்?''

"உனது விழிகளின் கூர்மை, என் இதயத்தையே குத்திப் பாய்ந்து நிற்கட்டும் என்று விட்டுவிடுவேன்!''

''சரி, சரி, சாந்தமான ஏழையே, உன்னை நான் நன்கறிவேன்; என்னிடமிருக்கும் அனைத்தையுமே நீ கேட்கின்றாய்,''

## 27

"காதல், துன்பத்தையே கொண்டு வந்தாலும், காதலையே நம்பு. உன் இதயத்தையே மூடிவிடாதே."

"ஆ, இல்லை, எனது நண்பனே! உனது சொற்கள் இருண்டிருப்பதால், என்னால் அதன் பொருளை உணர்ந்துகொள்ளமுடியவில்லையே!''

"இன்பம் பனித்துளி போன்றது; சிரிக்கும் போதே, மறைந்துவிடுகிறதே. ஆனால் துன்பம் உறுதியாக நிலைத்து நிற்கக்கூடியது. உனது கண்களிலே, துன்பக் காதலே நின்று நிலவட்டும்."

"ஆ இல்லை, எனது நண்பனே! உனது சொற்கள் இருண்டிருப்பதால், நான் அதன் பொருளை உணரமுடியவில்லையே!"

"தாமரை மலர் சூரியனைக் கண்டதும் மலர்ந்து விடுகிறது; தன்னிடமிருப்பதை யெல்லாம் இழந்து விடுகிறது. முடிவற்ற குளிர்ந்த மழைக்காலத்தில் தாமரை மலராமல் மொட்டாகவே நிற்குமா என்ன?"

"ஆ, இல்லை, இல்லை, என் நண்பனே! உனது சொற்கள் இருண்டிருப்பதால், அவைகளின் அந்தரங்கத்தையே நான் அறிந்துகொள்ள முடியவில்லையே!"

## 28

உனது துன்பம் நிறைந்த கண்கள், கேள்வி கேட்க முன்வருகின்றனவே, சந்திரன் கடலை அளக்க முயல்வதுபோல, உனது கண்கள் எனது அந்தரங்கத்தையே அளக்க அவாவுகின்றனவே.

உன் கண்பார்வையில், என் வாழ்க்கை முழுதையும் ஒளிக்காமல் திறந்து காட்டிவிட்டேன். அதனால் தான் நீ என்னை அறிந்துகொள்ள முடியவில்லை.

ஒரு ரத்னமாக இருந்தாலும், அதைத் துண்டு துண்டாக உடைத்து, உன் கழுத்துக்கு ஒரு முத்தாரம் செய்து தந்துவிடுவேன்;

ஒரு சின்னஞ் சிறு மலராக இருந்தாலும், அதை உடனே செடியிலிருந்து கிள்ளி எடுத்து, உனது கூந்தலில் செருகி அலங்கரிப்பேன்;

ஆனல், எனது இதயம், ஒரு இரத்னமுமல்ல சின்னஞ்சிறு மலருமல்லவே, நான் என் செய்வது? ,

எனது இதயத்தின் ஆழத்தையோ, கரையை யோ கண்டுபிடிக்க முடியவில்லையே? எனது இதய ராணியாகவே நீ மாறும்வரை, எனது இதயத்தின் ஆழத்தைக் கண்டறிய முடியாதுதானே! அது ஒரு நிமிஷ இன்ப வெறியாக இருந்தாலும், அது ஒரு இனிய புன்முறுவலில் மலர்ந்துவிடும்; அந்த நிமி ஷமே, இந்த விந்தையை நீ கண்டுகொள்வா யல்லவா?

அது ஒரு துன்பத் துடிப்பாக இருந்தாலும், அது ஒரு தெளிந்த கண்ணீர் வெள்ளமாக பெருக் கெடுத்தோடும்; கண்ணீர்த் துளியிலே, இதய ரகசியம் பாஷையின் துணையின்றியே துடித்து மேலே நிற்குமல்லவா?

ஆனல், இதுகாதல், காதல், காதல்; காதல்உல கிலே இன்பமும்துன்பமும்எல்லையற்றநிலையில் கொந் தளிக்கும் அல்லவா? காதலின் தேவையும், எல்லை கடந்தது; காதலுக்குச் செல்வமும் தேவைதான்!

காதல் உனது வாழ்க்கையை ஒட்டிப் படர்ந் திருக்கிறது; பிரிக்க முடியாத இன்ப துன்பக் கடல், காதல் உலகம்!

## 29

காதலியே! உனது பாடலின் பொருள் என்ன? என்னிடம் நேராகவே மௌனத்தை ஒழித்துவிட்டுப் பேசத் தொடங்குவாயாக!

இரவு, இருண்டிருக்கிறது; மேகங்களில் பதுங்கி மறைந்து கிடக்கின்றன, நட்சத்திரங்கள்; இலைகளினூடே, காற்றுப் பெருமூச்சிடுகிறது.

எனது கூந்தலின் கதிர்களை அவிழ்த்துப்போடுகிறேன்; எனது நீல ஆடை, இருண்ட இரவு போல என் உடலைச் சுற்றிப் படர்ந்து நிற்கும்; உனது தலையை எனது மார்பிலே சாய்த்துக் கொண்டு, உனது ஆர்வச் செவிகளிலே காதல் இரகசியத்தையே பொழியட்டுமா? தனிமையில் வளர்கின்ற இனிமையிலே, இரகஸியம் இன்ப அதிர்ச்சியோடு பொங்கி வழியட்டும். நான் எனது கண்களையே மூடிக்கொண்டு, அமைதியாகவே கேட்டுக்கொண்டிருக்கிறேன்.

உனது வார்த்தைகள் முடியும்போது, நாம் மௌனமாகவே குந்திக்கொண்டு இன்புறுவோம்; நமது மௌனம் வளரும்போது, மரங்கள் நமது மௌனத்தைக் கலைத்துக்கொண்டு இரகசியம் பேசுமல்லவா?

இரவு வெளுத்துக் காலை விடியும்போது, நாம் இருவரும் ஒருவர் கண்களை ஒருவர் பார்த்துவிட்டுத் தனித்தனியே வெவ்வேறு வீதிகளில்செல்வோமாக!

காதல் மண்டிய காதலியே, உனது பாட்டின் அந்தரங்கப் பொருள் என்ன? கூறமாட்டாயா, இளங்குமரியே, உனது ஆழ்ந்த இரகசியத்தை!

## 30

எனது கனவுகளில், நீ ஒரு அந்தி மேகமாகவே உலவுகின்றாய்! எனது காதல் உணர்ச்சி அலைக

ளால், உனது உருவத்தைப் படமாக்கி, வருணம் இழைக்கின்றேன்;

நீயே, எனது உடைமை; எனது முடிவற்ற இன்பக் கனவுகளின், இன்பவாசியல்லவா, பேசும் பொற் சித்திரமல்லவா?

எனது இதய ஆர்வக்கனல் போல, உனது ரோஜா இதழ்கள் போன்ற பாதங்கள் பொலிகின்றனவே! எனது அந்திப் பாடல்களைத் தூண்டிய காதற் கதிர் நீயே யாவாய்!

உனது உதடுகளில் தித்திப்பும் துவர்ப்பும் கலந்தே ஊசலாடுகின்றன: எனது இதய வேதனே, ஒரு லாகிரியாகி, உன் உதடுகளுக்கு இத்தகைய தன்மையையே ஊட்டி விடுகின்றனவே!

எனது நிகரற்ற தனிக்கனவுகளில் தத்தளிக்கும் உனது பொற் சித்திரம், என் நெஞ்சில் இடையருத கலக்கத்தையும் துடிக்கும் இன்பத்தையும் சஞ்சல வாயிலாகப் பொழிந்து கொண்டிருக்கிறதே, என் செய்வேன், பெண்ணே!

எனது இன்ப அதிர்ச்சி, உனது கண்களில் அலைகின்றதே! எனது கண்களிலே, உனது சித்திரமும் உறுதியாக வேரூன்றிவிட்டதே, எனது இசையின் வலையிலே, உன்னைப்பிடித்துக் கொண்டு, இசையிலே உன்னை அலங்கரித்து விட்டேன், அல்லவா?

எனது அழியாக் கனவுகளில் அலைகின்ற அருமையான காதல் சித்திரமல்லவா, நீ! காதலியே,

உன்னை மறக்க என்னால் முடியுமா? முடியவே முடியாது. ஐயோ முடியவே முடியாது!

## 31

உனது கண்களிலே, எனது இதயம் பறந்து வந்து கூடுகட்டி விட்டது;

காலைத் தொட்டிலும், உனது கண்கள் தான்; நட்சத்திரத் தொட்டிலும், உனது கண்கள் தான்; உன் கண்களின் ஆழத்திலே, எனது பாடல்கள் மூழ்கிவிட்டனவே;

உனது விந்தை மண்டிய கண்களின் விதானத்திலே, எனது இதயம் பறந்து சிறகடித்து வருகின்றதல்லவா? உன் கண் மலர்களிலே, அதில் காண்கின்ற மேக அலைகளிலே, எனது இதயம் சிறகு விரித்துச் சுழலட்டும்; அதிலே காண்கின்ற சூரியக் கதிரொளியைக் கண்டு, இன்புற்றிருக்கட்டும்!

## 32

தலைவி, தலைவனிடம் ஆசையுடன் பாசமாய்ப் பேசுகின்றாள்:

"அருமைக் காதலரே! இது உண்மைதானா என்று சொல்லுங்கள், பார்ப்போம்!

எனது கண்கள் இன்ப வெறியில், மின்னலை வாரி இறைக்கும்போது, தங்கள் நெஞ்சிலே இருண்ட மேகங்கள் புயலாகவே மாறிக் கதறவில்லையா?

காதல் மொட்டு இனிமையாக மலர்ந்து மணம் வீசுவதுபோலவே எனது உதடுகள் தித்திக்கின்றனவா? இதுவும் உண்மையா?

வைகாசியின் வனப்பு, என் உடல் வனப்பிலே, அவயவ எழிலிலே, மிஞ்சிநின்று கூத்தாடுகின்றதா, என்ன?

எனது பாதஸ்பரிசத்தால், பூமியே ஒரு வீணையாகமாறி பாடல்களைப் பொழிகின்றதா, என்ன?

என்னை கண்டதும், இரவின் கண்களிலிருந்து பனித்துளிகள் சிதறி விழுவதுவும், காலை ஒளிக் கதிர்கள் என் உடலைச் சுற்றி ஒளிப் போர்வையாக அமைந்து இன்பம் அனுபவிக்கின்றனவா, என்ன? இதுவும் உண்மைதானா?

என்னையே தேடி உனது காதல் பல யுகங்களின் வழியாக உலக முழுதும் அலைந்து வந்திருப்பதும் உண்மைதானா?

என்னைக் கண்டபின், எனது சாந்த மொழியிலும் என் கண்களிலும் உதடுகளிலும் அலைகின்ற கூந்தலிலும், உனது நீண்டநாள் ஆசை இன்புற்றுச் சாந்தியடைந்ததா? என்ன?

அகண்ட சக்தியுள்ள இறைவனின் சிருஷ்டி லீலையும், எனது சிறு நெற்றியிலே எழுதப்பட்டிருப்பதுவும் உண்மைதானா?

எனது காதலரே, இவை அனைத்தும் உண்மைதானா என்று என்னிடம் சொல்லமாட்டீரா?"

## 33

அருமைக்காதலியே! எனக்கு உன்மேல் ஆசை; என் காதலை நீ மன்னிப்பாயாக!

வழியிழந்த பறவைபோல, நான் இங்கே சிக்கிக் கொண்டேன்; உணர்ச்சி வெறியில் என் இதயம் ஆடவுமே, அதன் திரை மறைந்து உண்மை வெளி யானது. அருமைக் காதலியே, நீ என் உள்ளத்தைக் கண்டு இரக்கம் கொண்டு, என் காதலை மன்னித்து விடுவாயாக!

நீ என்னைக் காதலிக்க முடியாவிட்டால், என் மன வேதனையை மன்னித்துவிடு;

எட்டி நின்று சந்தேகத்துடன் என்னைப் பார்க் காதே, நான் என் மூலைக்குப்போய் இருட்டிலே மறைந்துவிடுகிறேன்.

எனது இரு கைகளாலும், எனது கொடிய வெட்கத்தை மூடி மறைத்துக்கொள்கிறேன்;

நீ என்னைக் காதலித்தால், எனது சந்தோ ஷத்தை மன்னித்துவிடு.

எனது இதயம் இன்பப் பெருக்கில் வெறிபிடித் துச் சுழலும்போது, எனது பயங்கரமான இன்ப வெறியைக் கண்டு சிரிக்காதே.

எனது சிம்மாசனத்தில் இருந்துகொண்டு, ஈஸ் வரி அருள்வதுபோல, நான் என் பிரிதியை உனக்கு அளிக்கும்போது, எனது கருவத்தைப் பொறுத்துக்

கொள்வாயாக; அருமைக் காதலியே, எனது சந்தோஷத்தையும் மன்னித்துவிடு.

## 34

எனது காதலியே, என் அனுமதியின்றி வெளியே போகாதே.

இரவெல்லாம் நான் உறங்காமல், விழித்துக் கொண்டிருந்தேன்; இப்போது, எனது கண்கள் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டன.

நான் தூங்கும்போது, நீ எங்கு போய்விடுகிருயோ, என்று நான் அஞ்சிக்கவலைப்படுவதுண்டு.

அன்புக் காதலியே, என்னைக் கேட்காமல் நீ வெளியே போய்விடாதே.

நான் திடீரென்று விழிப்புற்று, கைகளை விரித்து உன்னைத்தொட முயலும்போது, 'ஆ, இது ஒரு கனவா,' என்று நானே கேட்டுக்கொள்கிறேன்.

எனது இதயத்தால் உனது பாதங்களைப் பிணைத்து என்மார்பிலே இணைத்துவைக்கக்கூடுமா?

அன்புக் காதலியே, என்னைக் கேளாமல் நீ வெளியே போய்விடாதே, சரியா?

## 35

நான் உன்னை விரைவில் தெரிந்துகொண்டு விடுவேன் என்று, நீ என்னுடன் விளையாடுகிருய்.

உனது கண்ணீர்த் துளிகளை மறைக்கவே, உன்னுடைய சிரிப்பை மின்னலாகவே பொழிந்து என் கண்களையே மறைத்துவிடுகின்றாயே, என்ன?

உனது கலையும் தந்திரமும் எனக்கு விளங்கி விட்டதே!

நீ விரும்பிய வார்த்தையை ஆசையோடு சொல்லாது நிற்கின்றாயே!

நான் உன் அருமையை மிக அருமையாக அறிந்து கொண்டுவிடா வண்ணம், நீ ஆயிரம் வழிகளில் என்னை ஏமாற்றித் தப்பியோடப் பார்க்கின்றாயே!

கூட்டத்தில் உன்னை நான் கண்டுபிடிக்கமுடியாமல் திண்டாடுவேனே என்றுஎண்ணி, நீயும் தனியே நிற்கின்றாயே.

உனது தந்திரம் எனக்கு நன்றாய்த் தெரியுமே!

நீ வழக்கமாய்ப் போகின்ற பாதையில் போவதில்லை.

பிறரைவிட, நீ அதிகமான பாத்தியம் கொண்டாடிக்கொண்டு, உரிமையுடன் நீ மௌனம் சாதிக்கின்றாயே!

விளையாட்டுப்போல், அலட்சியமாக, நீ என்னுடைய அன்புக்கொடைகளையே மறுக்கின்றாயே!

உனது தந்திரம், கலைதானே!

நீ விரும்பியதையும் எடுத்துக்கொள்ள மறுக்கின்றாயே! என்ன புதுமை!

## 36

அவன் என்னைப் பார்த்து ரகசியமாகச் சொன்னான்: "என் காதலியே, உன் விழிகளை உயர்த்துவாயாக!"

நான் அவனைக் கடிந்து கோபித்துக்கொண்டு, "போ, போ" என்றேன்; ஆனால் அவன் எதற்கும் அசையவே இல்லையே.

அவன் என் முன்னால் நின்றுகொண்டு, எனது இரு கைகளையும் பிடித்துக்கொண்டான்; "என்னை விட்டுவிடு" என்றேன், நான்.

அப்படியும் அவன் போகவே இல்லையே!

அவன் முகத்தை என் காதருகே கொண்டுவந்தான்; நான் அவனை லேசாகப்பார்த்தேன்; "ஐயோ, வெட்கம்!" என்றும் சொல்லிப்பார்த்தேன். அவன் அப்படியும் அசைந்தானா!

அவனுடைய உதடுகள் என் கன்னத்தைத் தொட்டன; என் உடல் சிலிர்த்து ஆடியது. "நீ ரொம்பத் துணிந்துவிட்டாயே" என்றேன், நான். அப்படியும் அவன் அசையவே இல்லை, வெட்கப் படவே இல்லையே!

என் கூந்தலில் ஒரு மலரைச் செருகினான். "அது பயனற்றது," என்றேன், நான். அவன் உள்ளம் அசையவே இல்லை.

என் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றிக் கொண்டு, அவன் ஓடியே போய்விட்டானே! நான்

அழுது புலம்பிக்கொண்டு, "அவன் ஏன் இன்னும் திரும்பிவரவில்லையே," என்று என் இதயத்தையே கேட்டுக் கேட்டு வருந்தி அழுகின்றேன்.

## 37

அழகியே! என் கழுத்தில் நீ புதிய மாலை ஒன்றைப் போடப்போகிருயா?

ஆனல், நான் செய்த மாலை பலருக்கு: கொஞ்சம் கொஞ்சம் கண்ணில் பட்டு மறைகின்றவர்களுக்கும், காணுத தேசங்களில் உள்ளவர்களுக்கும், அல்லது கவிஞர்களின் பாடல்களில் வசிப்பவர்களுக்குமே, அந்த மாலை, தெரியுமா?

உனது மாலைக்குப் பதிலாக, என் இதயத்தை வேறு மாலை வேண்டுமென்று கேட்பது இப்படியா, இவ்வளவு, காலதாமதமாகவா?

ஒரு காலத்தில் என் வாழ்க்கை, ஒரு மொட்டுப் போல மூடிக்கிடந்ததும் உண்டு, அன்று மணம் அனைத்தும் உள்ளே ஆழத்தில் மறைந்து கிடந்ததும் உண்டு.

இன்று அது சிதறிக்கொண்டு வெளியே பாவி விட்டதே! மீண்டும் அதே மணத்தைத் திரட்டிக் கூட்டி அதே இடத்தில் அடைக்க மந்திர சக்தி ஏதாவது உண்டா?

என் இதயம், என் இஷ்டத்துக்கு ஒருவரிடம் மாத்திரம் நிலைக்காமல், பலரிடமும் விரிகின்றதே? என் செய்வேன்!

## 38

எனது காதலியே!

ஒரு காலத்தில், உனது கவிஞன் மனதிலே பெருங்காவியம் உதயமானது.

ஐயோ! நான் கவனிக்கவில்லையே; அதில் உன் சிலம்புகள் புலம்பிக் குமுறி நின்றன; என்ன துன்பம்!

அக்காலத்திலே, பாடல்கள் சிறு சிறு வனப்புத் துண்டுகளாக உன் காலடியில் சிதறிக் கிடந்தன.

என் பழைய யுத்தக் கதை மூட்டைகள் எல்லாம் சிரிக்கும் அலைகளால் சிதற வடிக்கப்பட்டு, கண்ணீரிலே ஊறிக் கீழே அமிழ்ந்துவிட்டன.

இந்த நஷ்டத்தை யெல்லாம், நீ எனக்கு ஈடு செய்து தரவேண்டும், அருமைக் காதலியே சரியா?

இறந்த பின் என்புகழ் சிதறி யழிந்துவிடலாமல்லவா? ஆகவே, நான் உயிருடன் வாழும்போதே என் அழியாப் புகழை நிலை நிறுத்துவாயாக! என் நஷ்டத்தைப்பற்றி நான் வருந்தவுமில்லை, உன்னைக் குறை கூறவுமில்லை.

## 39

காலை முழுதும் நான் உனக்காக ஒரு மாலை கட்ட முயன்றேன், ஆனல் பயனில்லை. மலர்கள் நழுவி நழுவிக் கீழே விழுகின்றன.

உனது கூர்மையான கண்களால், நீ அங்கே உட்கார்ந்துகொண்டு என் வேலையை ரகசியமாகவும் நுட்பமாகவும் கவனித்துக் கொண்டிருக்கிறாய்.

குறும்பு செய்யச் சிந்திக்கும் உன்னுடைய கண்களையே கேள்: அது யாருடைய குற்றம் என்று?

நான் ஒரு பாட்டுப்பாட முயல்கின்றேன், ஆனால் அதுவும் வீண் முயற்சியே.

உன் உதடுகளிலே, மறைமுகமாகவே ஒரு புன்முறுவல் அரும்பித் தத்தளிக்கிறது; எனது தோல்வியின் காரணம் என்ன என்று, அதையே கேட்பாயாக.

தாமரை மலரில் தேன் குடிக்கும் வண்டுபோல, போதையின் வெறியில், என் குரல் மறைந்து மௌனத்தில் ஆழ்ந்த காரணம் என்ன என்று, சத்தியமாகவே, உனது சிரிக்கும் அதரங்களையே கேள்: அந்திமாலை: மலர்கள் இதழ் குவிந்து நிற்கும் வேளையல்லவா?

ஆகவே, உன் அருகே உட்கார்ந்து கொண்டு, மௌனமாகவே என் உதடுகள், நட்சத்திரங்களின் மங்கலான ஒளியில் உன் கன்னத்தை முத்தமிட அனுமதி தருவாயாக!

## 40

உனது அனுமதிபெற நான் வரும்போதெல்லாம், நம்பமுடியாத ஒரு இனிய புன்முறுவல் உன் விழிகளிலே அலைவதைக்காணலாம்.

நான் இப்படி அடிக்கடி வந்துபோயிருக்கிறேன், நான் மீண்டும் வருவேன் என்றுதானே நீயும் சிந்திக்கிருய்;

உண்மையைச் சொல்லப்போனுல் என் மனதிலும் அதே சந்தேகம்தான் வருகிறது;

வசந்த நாட்கள் திரும்பத் திரும்ப வந்து போகவில்லையா? பூர்ணசந்திரன் மீண்டும் மீண்டும் வரவில்லையா? வருஷந்தோரும், மலர்கள் கிளைகளில் மீண்டும் மீண்டும் தோன்றி வெட்கி மறையவில்லையா? அதேபோல, நான் உன்னைவிட்டுப் பிரியும்போதெல்லாம் மீண்டும் நான் உன்னிடம் வருவேன் என்பதும் உறுதிதானே?

இந்த மாயாஜாலத்தை, கொஞ்சகாலம் வைத்து வை; இந்த பிரேமையை, அவசரப்பட்டு விரட்டி விடாதே.

நான் உன்னை என்றுமே விட்டுப் பிரியப்போகிறேன் என்று சொல்லும்போது, அதை உண்மையென்று நம்பு; ஒரு நிமிஷமேனும், உனது கருவிழிகளைச் சுற்றி கண்ணீர்த்துளிகள் மங்கி மின்னிப் பொலியட்டும்.

மீண்டும் நான் உன்னிடம் வரும்போது, எவ்வளவு தந்திரமாக வேண்டுமானுலும் நீயே சிரித்துப் பார்.

## 41

இனிமேல் நான் உன்னிடம் மிக மிக ஆழ்ந்த சொற்களையே பேச ஆசைப்படுகிறேன்; நீ சிரித்து

விடுவாயோ என்று பயந்து, நான் அவ்வாறு ரகசியம் பேசத் துணியவில்லை.

அதனுல்தான், நான் என்னுள்ளேயே சிரித்துக் கொண்டு, எனதுரகசியத்தையே சிதறவடிக்கிறேன்.

என் துன்பத்தின் பளுவை, அதனுல்தான குறைத்துக்கொள்ளுகிறேன்! நீயும்அப்படித்தானே!

அளவுக்கு மிஞ்சி உண்மையான வார்த்தைகளேயே, நான் உன்னிடம் பேச ஆசைப்படுகிறேன்; நீ ஒரு சமயம் அவைகளை நம்பமாட்டாயோ என்று அஞ்சியே, நான்சொல்லப் பின்வாங்குகிறேன்.

அதனுல்தான், பொய்யே சொல்லி உண்மையை மறைத்து, அதற்கு நேர் எதிரான கருத்தை நீ அறிந்து கொள்வாய் என்று தலைகிழாகவே பேசுகிறேன்.

என் கவலையைக்கூட நகைக்கத்தக்க முறையிலே காட்ட வேண்டிய அவசியம் இப்படியெல்லாம் வந்து விடுகிறதே? நீயும் அப்படித்தானே?

நான் உன்னிடம் மிக நுட்பமான மதிக்கமுடியாத வார்த்தைகளை உபயோகிக்க ஆசைப்படுகிறேன்? இருந்தாலும் எனக்குத் தைரியம் வரவில்லையே; நீயும் அதே நுட்பமான பாஷையை வழங்காவிட்டால் என்ன செய்வது என்றே பின் வாங்குகிறேன்.

அதனுல்தான், நான் உன்னிடம் கடினமான உறுதியான பேர்களைச் சொல்லி, எனது உணர்ச்சி

யற்ற வலிமையைப் பற்றிப் பெருமையடித்துச் கொள்ளுகிறேன்.

எந்தத் துன்பத்தையும் நீ உணாமுடியாதபடி நான் உன் மனதைப் புண்படுத்துகிறேன் அல்லவா?

நான் உன் அருகில் மௌனமாக உட்கார்ந்திருக்க ஆசைப்படுகிறேன்; ஆனால், என் இதய ரகசியங்கள், என் உதட்டின் வழியாக வெளியே கசிந்துவிடுமோ என்றே அஞ்சுகிறேன்.

அதனால்தான், நான் உளறிக் கொட்டிக் கொண்டே காதல் மழலை பேசி, சொற்களின் ஆழத்தில் என் இதயத்தையே மறைக்க முயல்கின்றேன்.

நான் என் கவலையைத் திருகிக்காட்டும்போது, நீயும் அவ்வாறு செய்துவிடுவாயோ என்று நடுங்குகிறேன்.

நான் உன்னைவிட்டு ஓடிவிடலாமா என்றும் ஆசைப்படுவதுண்டு; ஆனால் மனம் துணியவில்லையே! அப்படி ஓடினால், எனது கோழைத்தனம் உனக்குப் புரிந்து விடுமே என்றும் அஞ்சுகிறேன்.

அதன் காரணமாகத்தான், நான் நிமிர்ந்த தலையுடன் கம்பீரமாகவே, உன் முன்னிலையில் கவலையின்றியே வந்துவிடுகிறேன், தெரியுமா?

உன் வேல் விழிகளிலிருந்து வரும் காதல் அம்புகள், என் கவலையைப் புதுப்பிக்கின்றனவே!

42

ஓகோ, காதல் போதை தலைக்கேறிவிட்டதே!

நீ கதவை உதைத்துத் திறந்து கொண்டு ஜனங்களின் முன் கோமாளியாக விளையாடினாலும்,

நீ ஒரே இரவில் உனது பையைக் காலிசெய்து கொண்டு, விவேகத்தையே வீசி எறிந்தாலும்,

நீ அதிசயமான பாதை வழியாக நடந்து கொண்டு, பயனற்ற பண்டங்களோடு விளையாடித் திரிந்தாலும்,

[நீ பாட்டையோ, பகுத்தறிவையோ பொருட் படுத்த வேண்டாம்]

நீ புயலிலே கப்பலில் பாய்மரம் விரிக்கும்போது சுக்கான் இரண்டாக முறிந்தொழிந்தாலும்,

நண்பனே!

நான் போதை வெறியோடு உன்னையே பின் பற்றி நாசமாய்ப் போகவே ஆசைப்படுகிறேன்.

பல மேதாவி நண்பர்களிடையே, எனது பகல் இரவு நாட்களை நாசம் செய்திருக்கிறேன்.

அறிவு பெருகப் பெருக, எனது கேசம் நரைத் தே போய்விட்டது; கூர்மையாகப் படிக்கப் படிக்க, எனது கண்கள் மங்கிவிட்டன;

பல வருஷங்களாகவே, அறிவைக் குப்பை குப் பையாகவே திரட்டி வைத்திருக்கிறேன்;

அவைகளையெல்லாம்பொடியாக்கி,அந்தக்குப்பை மேட்டின்மேல் கூத்தாடி, காற்றலைகளிலே அவைகளைச் சிதறடிக்க வேண்டுமல்லவா?

குடித்துக் குமுறிக் குப்பைக்குப் போவதும், அறிவின் சிகரம்தானே? இதுகூட எனக்குத் தெரியாதா?

சூழ்ச்சிகளும் சூத்திரங்களும் சூறையாடப்பட வேண்டும்; நான் நம்பிக்கை இழந்து தடுமாறவேண்டும்.

கொடிய புயலே தோன்றி, என்னை நங்கூரத்தை விட்டுப் பிய்த்துக்கொண்டே போகட்டுமே!

பயன்படக்கூடிய தந்திரிகளான மேதாவிகளும் வேலைக்காரர்களும் உலகத்தில் இருப்பது உண்மைதான்;

முதல் இடத்திலும், அ.தன்பின் அடுத்த இடத்திலும் அந்தஸ்தோடு மனிதர்கள் வந்து போவதும் உண்மைதான்;

அவர்கள் சந்தோஷமாகச் செழித்து முன்னேறட்டும், நான் அறிவிலியாகப் பயனற்று அழியட்டும்;

உலகத்தில் எதற்கும் நிலையில்லை; நிறையற்ற நிலை, போதையிலே ஊறி முறிந்தோடுவதும் திண்ணம்;

அந்தஸ்தைப் பொறுத்த சகல உரிமைகளையும் நான் இந்த நிமிஷமே விட்டுவிடத் தயார்;

எனது அறிவின் அகந்தையையும், நல்லது கெட்டது என்று பகுத்தறியும் சக்தியையும் இன்றே விட்டுவிடுகிறேன்;

எனது இறுதிக் கண்ணீர்த் துளியையும் சிதற வடித்துவிட்டு, ஞாபகசக்தி என்னும் பாண்டத்தையே உடைத்தெறியத் தயார், தெரியுமா?

எனது சிரிப்பையே செங்கிறதிராக்ஷை ரசத்தில் குளிப்பாட்டி, மின்னலிட விடுவேன்;

ராஜ நீதிச் சின்னங்களையும், விவஸ்தையின் அடையாளங்களையும், சுக்குநூருகக் கிழித்தெறிந்து விடுவேன்;

பயனற்ற வாழ்க்கையிலே, போதையிலே உளறி நான்பொடியாய்ப்போக வேண்டுமென்றுசபதமெடுத்துக்கொள்ளத் தயார், தெரியுமா?

## 43

நண்பர்களே! நான் ஒருபோதும் ஒரு துறவியாக மாறப்போவதில்லை-, நீங்கள் என்ன சொன்ஞலும் சரி!

என்னுடன் அவளும் சேர்ந்து சபதம் செய்து பிரதிக்ஞை செய்துகொள்ளாமலிருந்தால், நான்ஒருபோதும் துறவியாக மாறவே மாட்டேன்.

வீட்டிலே சாந்தியோடு வாழ்ந்து பிராயச்சித்தம் செய்துகொள்ள ஒரு தகுந்த வாழ்க்கைத் துணை இல்லாதுபோனல், நான் துறவியாக மாறவே மாட்டேன்-, இது உறுதி, சத்தியம்.

நண்பர்களே! நான் எனது இல்லத்தைவிட்டு வெளியேறவே மாட்டேன்; காட்டிலே துறவியாகவே தவம் செய்யவேண்டுமானால், காட்டின் நிசப்தத்தை அழகுபடுத்த காதலின் இனிய குரலும், சிரிப்பின் ரீங்காரமும், மஞ்சள் புடவையின் சலசலப்பும் தேவைதான்; இவைகள் இல்லாமல் ஒருவன் துறவியாகவே முடியாது.

## 44

சுவாமிகளே! எங்களைப் போன்ற இந்த பாப ஜோடிகளை மன்னித்து விடுங்கள்.

வசந்த காற்றுகள், இன்று கொடும் புயலாகவே வீசுகின்றன; தூசியும் காய்ந்த இலைச் சருகுகளும் புயலோட்டத்தில் பறக்கின்றன; அத்துடன், தங்கள் உபதேசங்களும் அடியோடு மறந்தே போகின்றன.

தந்தையே! வாழ்க்கையே ஒரு இடம்பம் என்று சொல்லிவிடாதீர்கள்;

ஏனெனில், மரணத்தோடு நாங்கள் ஒரு முடிவான சமாதானம் செய்துகொண்டு விட்டோம்; சில மணமுள்ள மணிகள் அளவிலே, நாம் இருவரும் அமர நிலைக்கே வந்துவிட்டோம்.

அரசனின் பட்டாளம் வந்து நம்மை மூர்க்கத்தனமாகத் தாக்கினாலும், நாம் தலையசைத்துக் கொண்டு, "சகோதரர்களே! எங்களைத் தொந்தரவு செய்யாதீர்கள். தங்களுடைய போர் வெறியைத்

தீர்த்துக்கொள்ள வேண்டுமானால், வேறு எங்காவது செல்லுங்கள். ஒரு சில நிமிஷங்களை நாங்கள் அமரர்களாக வாழவிரும்பும்போது, எங்களைத் துன்புறுத்தாதீர்கள்'' என்று சொல்லிவிடுவோம்;

நண்பர்கள் நம்மைச் சுற்றிக்கொண்டு நின்றால் அவர்களுக்கு வணக்கம் செலுத்திவிட்டு, "இந்த விசாலமான அன்புக் கூட்டம், எங்களுக்கு இடைஞ்சலாகவே தோன்றுகிறது; ஆகாசத்தில், நாங்கள் வசிப்பதற்கு மிகக் குறைந்த இடமே இருக்கிறது. வசந்தகால மலர்கள் ஏராளமாக இங்கு மலர்ந்து குவிந்துவிடுகின்றன; ஈக்கள் கூட்டம் கூட்டமாகச் சிறை விரித்து மோதிக்கொண்டு வருகின்றனவே; அமர நிலையிலே நாங்கள் இருவரும் வசிக்கும் சிறு விண்ணுலகம், கேவலம் மிகக் குறுகலாக இருக்கிறதே, என் செய்வது?'' என்று முறையிடுவோம்.

## 45

போகின்ற விருந்தாளிகளை விரைவாக ஆசிர்வதித்துவிட்டு, அவர்களுடைய காலடிகளைக் கூட்டியே மறைத்துவிடு.

எது எளிதாயும், சாதாரணமாயும், சமீபமாயும் இருக்கிறதோ, அதைப் புன்முறுவலுடன் இதயத்தில் ஏற்றுக்கொள்வாயாக.

"என்று சாவோம்?'' என்று விளங்காத மனித வடிவங்களின் திருவிழா, இன்றுதான்!

அலைகளிலே புரண்டு மறைகின்ற ஒளிச்சிதர்கள்போல, உனது சிரிப்பும் பொருளற்ற களிப்பாகவே மறையட்டுமே!

இலையின் நுனியிலே உருளுகின்ற பனித்துளி போல, உனது வாழ்க்கையும் காலத்தின் கூரிய விளிம்பின்மேல் நர்த்தனம் செய்யட்டும்.

நிமிஷத்தில் தோன்றி மறைகின்ற தாளலயத்திலிருந்து, உனது வீணைத் தந்திகளை மீட்டுவாயாக!

## 46

நீ என்னை விட்டுவிட்டு உன் இஷ்டம்போல் போய் விட்டாய்.

நான் உன்னையே நினைத்து அழுது கதற வேண்டுமென்றும், உனது தனி உருவத்தை மட்டும் தங்கப்பாட்டாக என் இதயத்திலே பொறித்து வைக்கவேண்டுமென்றும் நான் எண்ணியதுண்டு.

ஆனால், என்செய்வேன், எனது துர் அதிர்ஷ்டமே! காலம் மிகக் குறைந்து விட்டது.

இளமை, ஆண்டுகள் செல்லச் செல்ல, வற்றிக் குறைந்தே போகிறதே? வசந்த நாட்கள் ஓடியே மறைகின்றனவே; மிருதுவான சக்தியற்ற மலர்கள்; எக்காரணமுமின்றியே சாகின்றனவே; "தாமரை இலையிலே உருண்டோடுகின்ற பனித்துளி போன்றது மானிட வாழ்க்கை" என்று ஞானிகளும் புத்திமான்களும் கூறுகின்றார்களே.

இந்த அரிய கருத்துக்களை எல்லாம் அடியோடு மறந்து உதறித் தள்ளிவிட்டு, என்னையே மறந்து சென்றவனை நினைந்து மனமுருகலாமா?

அப்படிச் செய்வது மூர்க்கத்தனம், அறிவீனமல்லவா? காலம், மிகக்குறைவாகவே இருக்கிறது.

தூறிக்கொண்டு வரும் மழை இரவுகளே, வருக, வருக!

தங்கம்போல் மின்னும் இலை யுதிர்காலமே, வருக வருக!

எங்கும் முத்தங்களை வாரியிறைத்துக்கொண்டு வருகின்ற வனப்பு வாய்ந்த சர்வ சுதந்திர சித்திரையே, வருக வருக!

நாம் அமரர்கள் அல்லர், சாவுக்குள் நிற்பவர்களே!

தன் இதயத்தோடு பறந்தோடியவனை நினைந்து நினைந்து வருந்தி என் இதயத்தையே நொறுக்கிக் கொள்ளுவது அறிவுள்ள செயலா? காலம், மிகக் குறைவே!

ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, சிந்தனையில் ஆழ்ந்து, நீங்கள் அனைவரும் என் உலகத்தைச் சேர்ந்தவர்கள் என்று எதுகை மோனையில் பாடிப் பார்ப்பது, மிகவும் இனிமையாக இருக்குமல்லவா?

வீராவேசத்துடன், துன்பத்தையே கட்டிக் கொண்டு, அழுது தீர்ப்பதே நலம்!

ஆனால், ஒரு புதுமுகம் என் கதவண்டை எட்டிப்பார்க்கிறதே, என்கண்களைக்காண அவாவுகின்ற புதிய கண்கள்!

என் செய்வேன்? கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, பாட்டின்சுருதியையே மாற்றவேண்டியது தான் அல்லவா?

ஏனெனில், காலம் குறுகிவிட்டதே!

## 47

நீயும் இதற்கு இசைந்து சம்மதித்தால், நானும் என் பாட்டையே முடித்துவிடுகிறேன்.

உனது இதயம் துடிக்க ஆரம்பித்தால், என் கண்களால் உன் முகத்தையே பார்க்காமல் நிறுத்தி விடுகிறேன்.

உன் பாதையிலே உனக்கு ஏதாவது அதிர்ச்சி ஏற்பட்டால் நானும் உன் பாதையை விட்டு விலகி வேறு பாதையில் போகிறேன்.

நீ மாலை தொடுக்க முடியாமல் உன் மனம் குழம்பினால், உனது பூந்தோட்டத்தையே நான் வெறுத்து ஒதுங்கிவிடுகிறேன்.

உன் படகு செல்லும் கரையிலே, புயலால் தண்ணீர் சுழித்தோடினால், நான் என் படகை வேறு கரைக்கு ஓட்டிவிடுகிறேன்.

## 48

எனது காதலியே! உனது இனிமைப் பந்தங்களினின்று என்னை விடுதலை செய்வாயாக! முத்தங்களைத் திணறும்படி பொழிகின்ற வெறி ஒழிய வேண்டும்!

இந்தக் கடுமையான திணறும் காதல் மணம் என் இதயத்தையே அடைக்கிறதே!

கதவைத்திறந்து, காலைக் கதிரவனின் ஒளி வெள்ளம் உள்ளேவர இடம் கொடுங்கள்.

காதல்வெறி ஆலிங்கனத்திலே, உன்னுள்ளே நான் மூழ்கிக் கிடக்கிறேனே!

உனது காந்தத் தழுவலினின்று என்னை விடுதலை செய்; மீண்டும் எனக்கு ஆண்மை தந்து, நான் உனக்கு சர்வ சுதந்திர இதயத்தை வழங்கும்படி துணை செய்வாயாக.

## 49

நான் அவளுடைய கைகளை இறுகப் பிடித்துக் கொண்டு, என் மார்போடு அவளைத் தழுவி நிற்கின்றேன்.

என் கை நிறைய அவளது அழகைக்கொண்டு இன்புறவும், நான் அவள் முகத்திலே முத்தங்களை வாரி இறைத்து அவளுடைய இனிய புன்முறுவலைக் கொள்ளையடிக்கவும், எனது ஆர்வக்கண்களால் அவளது கருவிழிகளின் காதல் மினலைப் பருகவும் பேராசை கொண்டு, முயல்கின்றேன்.

ஆனால், இது சாத்தியமா? ஆகாசத்திலுள்ள நில எழிலை வடிகட்ட முடியுமா, என்ன?

நான் அழகைக் கட்டிப்பிடிக்கப் பார்த்தும், அழகின் மாயை என்னைவிட்டு நழுவிவிடுகிறதே,

என்செய்வது? என் கையில் அவள் உடல் கிடக்கிறதே யொழிய, சௌந்தரியம் நழுவி யோடிய ரகசியம் தெரிய வில்லையே?

இந்த முயற்சியில், களைத்துத் தோல்வியடைந்தே நான் திரும்பி வருகிறேன்.

ஆன்மா தொடக்கூடிய மலரை, எப்படி உடல் தொட முடியும்?

## 50

காதலியே! உன்னைச் சந்திக்க வேண்டு மென்னும் ஆவல், என் ஆவியை இரவும் பகலும் பற்றியே இழுக்கிறது. ஆனால் அந்தச் சந்திப்போ, எதையும் கபளிகரம் செய்யும் மரணம் போன்றது. தெரியுமா?

புயல் போல், என்னை வீசி எறிந்துவிடுவாயாக; என்னிடம் உள்ளது அனைத்தையும் நீயே எடுத்துக் கொள்; எனது தூக்கத்தையே திடீரென்று கலைத்து எனது கனவுகளையே கொள்ளையடித்துக்கொள்; என்னிடமிருந்து இந்த உலகையே பறித்துக் கொள்.

அந்த நிலைகுலைந்த அழிவிலே, ஆன்மநிர்வாண ஒருமையிலே, நாம் இருவரும் அழகின் ஒருமையிலே ஐக்கியமடைவோமாக!

ஆனால், இது வீண் ஆசைதான், பயனற்ற புலம்பல்தான்! இறைவனிடம் ஐக்கியமடையலாமே யொழிய, வேறு எந்தப் பொருளிலும் ஒன்றி இன்பங்காண முடியுமா?

## 51

இறுதிப் பாட்டையே நீ பாடி முடித்துவிடு. நாம் புறப்படத் தயாராகலாம்!

இரவுமே முடிந்துவிட்டதே! ஆகவே இரவை மறந்து விடுவாயாக!

எனது கைகளில் யாரைத்தழுவ முயல்கிறேன்? கனவுகளைச் சிறைப்படுத்த முடியுமா?

எனது ஆசைக் கரங்கள், வெறுமையைத் தழுவி வீண் மோசம் போகின்றனவே! அதனால் என் மார்பிலே கிறல் ஏற்பட்டு விட்டதே!

## 52

விளக்கு ஏன் அணைந்தது? காற்றிலிருந்து அதைக்காக்கத் துணியால் மறைத்தேன்-, அதனால் தான் விளக்கு அணைந்துவிட்டது.

மலர் எதனால் வாடிவிட்டது? அதிகமான ஆசையோடு, நெஞ்சில் அணைத்தேன்-, அதனால் மலரே வாடிவிட்டது!

ஓடை ஏன் காய்ந்துவிட்டது? அதைப் பூராவும் நானே அனுபவிக்கலாம் என்று, அதன் குறுக்கே ஒரு அணைபோட்டேன்; அதனால், ஓடை காய்ந்தே போய்விட்டது.

வீணைத்தந்தி ஏன் அறுந்துவிட்டது? தந்திக்கு மேற்பட்டசுவரத்தை அதில் அழுத்திப்பாடியபோது தந்தி தாங்கமுடியாமல் அறுந்தே போய்விட்டது. அவ்வளவுதான்!

## 53

ஏன், நீ ஒரே பார்வையில் என்னை வெட்கப்படும் படி செய்கிறாய்?

நான் ஒரு பிச்சைக்காரனாக இங்குவரவில்லையே, ஏதோ கொஞ்சநேரம், தோட்டத்தைச் சுற்றியுள்ள வேலியில், உன் வாசலின் ஓரத்தில், நான் நின்றேன்.

ஏன் நீ ஒரே பார்வையில் என்னை வெட்கப்படும் படி செய்கிறாய்?

உன் தோட்டத்திலிருந்து, நான் ஒரு ரோஜா மலரையோ, அல்லது ஒரு கனியையோ பிடுங்க வில்லையே?

வெளியே, வழிப்போக்கன் செல்லும் பாதை யிலே, நிழலோரத்தில்தான் நான் ஓய்வெடுத்துக் கொண்டேன்.

ஒரு ரோஜா மலரையும் நான் பிடுங்கவில்லையே?

ஆம், என் கால்கள் களைத்துப்போயின, மழை யும் கொட்டவே ஆரம்பித்துவிட்டது.

ஊசலாடும் மூங்கில் மரக்கிளைகளின் ஊடே காற் றுகள் குமுறிக் கதறின.

ஏதோ தோல்வியடைந்து ஓடுவதுபோல,மேகக் கூட்டங்கள் ஆகாசத்திலே ஓட்டம்பிடித்தன.

என் கால்கள் களைத்துப் போயின.

என்னைப்பற்றி நீ என்ன நினைத்தாயென்றோ, அல்லது யாருக்காக நீ உன் கதவண்டை காத்துக் கொண்டிருக்கிறாய் என்றோ எனக்கே தெரியாதே!

மின்னல் கொடிகள், உனது கூர்மையான கண்களையே தடுமாறச் செய்தன.

நான் இருட்டில் நிற்பதை நீ எப்படிப் பார்க்க முடியும் என்று நான் எப்படி அறிந்துகொள்ள முடியும்?

நீ என்னைப்பற்றி என்ன நினைத்தாய் என்பதே எனக்குத் தெரியாது.

பகல் முடிந்தது. ஒரு நிமிஷம், மழையும் நின்றது.

உனது தோட்டத்தின் முடிவில்உள்ள மரநிழலை விட்டும், புல்லின்மேல் நான் இருந்த இடத்தைவிட்டும் நான் போகின்றேன்.

இருட்டிவிட்டது; கதவைத் தாளிட்டுக்கொள்; நான் என் வழியே போகிறேன்.

நாள் முடிந்தது.

## 54

சந்தை கலைந்ததும், அகால அந்திநேரத்தில் நீ இந்தக் கூடையுடன் எங்கு அவசரமாய்ச் செல்கின்றாய்?

எல்லோரும் அவரவர் சுமைகளுடன் வீட்டுக்குத் திரும்பிவிட்டார்கள்: கிராமத்தில் மரங்களுக்கு மேல், சந்திரன் கிளம்பி எட்டிப் பார்க்கிறான்.

படகை அழைக்கும் குரல்களின் எதிரொலிகள், இருண்ட நீர் அலைகளைத்தாண்டி எட்டியுள்ள உனை

யிலே உறங்கும் காட்டு வாத்துக்கள் இருக்குமிடத்துக்கே வந்துவிட்டனவே!

சந்தை கலைந்தபின், இந்தக் கூடையுடன் நீ எங்கே அவசரமாய்ச் செல்கின்றாய், சொல்லமாட்டாயா?

உறக்கம் எங்கும் தாண்டவமாடுகிறதே! பூமியின் கண்கள் தூங்குகின்றனவே!

காக்கையின் கூடுகள் குரலற்று மௌனம் சாதிக்கின்றன; மூங்கில்மர இலைகள் முணு முணுக்காமல் வாய்மூடி நிற்கின்றன.

வயலிலிருந்து களைத்துத் திரும்பிவரும் கூலியாட்கள், தங்கள் வீட்டு வாசலிலே பாய்களை விரித்து உட்கார்ந்திருக்கிறார்கள்.

சந்தை கலைந்தபின், உன் கூடையுடன் நீ எங்கு விரைந்து செல்கின்றாய்? சொல், சொல்.

## 55

நீ போகும்போது, பகல் 12 மணி, ஆகாசத்திலே, சூரியன் கடுமையாகக் கதிர் வீசினான்.

நான் என் வேலையை முடித்துக்கொண்டு, முகப்பின் முன்வராந்தாவிலே தனியாகவே உட்கார்ந்து கொண்டிருந்தேன். அப்போது நீ போய்விட்டாய்.

எட்டியுள்ள வயல்களைத்தாண்டி, காற்றலைகள் கடுமையாகவே அதிர்ந்து வந்தன.

நிழலிலே, புருக்கள் தொடர்ந்துகளைப்பின்றியே கூவிக்கொண்டிருந்தன; எட்டியுள்ள வயல்களைச் சுற்றிவந்த ஒரு தேனீ பாடிப் புலம்பிக்கொண்டே, என் அறைக்கே பறந்து வந்துவிட்டது.

நடுப்பகலில், வெய்யிலின் கொடுமையால், கிராமமே உறங்கியது.

வீதி, ஜனசஞ்சாரமற்றுக் காலியாகவே கிடந்தது.

காற்றின் திடீர் அலைகளிலே, இலைகளின் சலசலப்பும், இரைந்து அடங்கியது.

ஆகாசத்தையே நான் பார்த்துக்கொண்டு, நான் ஆசைப்பட்ட பேர் ஒன்றை எழுத்தால் விண்ணிலே நெய்தேன்; பகலின் கொடிய வெய்யிலிலே, கிராமமே உறங்கி வழிந்தது.

நான் தலை பின்னிக் கொள்ளவே மறந்து விட்டேன்! எனது கூந்தல் கதிர்களைக்கொண்டு, இளந்தென்றல் என் கன்னத்திலே விளையாடியது.

கரையின் நிழலிலே, ஆறு அமைதியாகவே ஓடிச்சென்றது.

மேலே, வெள்ளை நிறமுள்ள சோம்பேறி மேகங்கள், துளிக்கூட அசையவே இல்லையே.

நான் தலை பின்னிக் கொள்ளவே மறந்து விட்டேனே!

நடுப்பகலிலே, நீயே போய்விட்டாய்! வீதியிலே மண் சுட்டுப் பொசுக்கியது; வயல்களே துடிதுடித்தன.

அடர்ந்த இலைகளினூடே, புறுக்கள் கூவிக் கொண்டிருந்தனவே.

முகப்பின் முன் வராந்தாவிலே, நான் தனியாக வே இருந்தேன், அப்போது நீயும் போய்விட்டாயே !

## 56

வீட்டிலே நித்தியம் இடையறுது வீட்டு வேலை யிலே ஊறிக்கிடக்கும் பல பெண்களில் நானும் ஒரு பெண் தான்.

நம்முடைய சாதாரண வாழ்க்கையின் அமைதி யிலிருந்து, என்னை நீ எப்படியோ தேர்ந்தெடுத்து விட்டாயே, ஏன் ?

வெளியிடாத காதல், புனிதமானது. இதய இருட்டிலே மின்னுகின்ற மாணிக்கம் போன்றது, அந்தக் காதல் ஒளி. அதிசயமான பகலொளியிலே அந்தக் காதல் பரிதபிக்கத்தக்க முறையில் இருண்டேபோகிறதே !

ஆ ! என் இதய மூடியை நீயே உடைத்தெறிந் தாய்; நிழல் மூலையிலே பதுங்கிக்கிடந்த என் 'சஞ்சலக் காதலை' நீ வெட்ட வெளிக்கே கொண்டு வந்துவிட்டாயே !

ஆனல் மற்ற பெண்கள் எல்லாம் எப்போதும் போல அமைதியாகவே இருக்கிருர்கள்.

அவர்களுடைய இதய ஆழத்தை ஒருவரும் உற்றுப்பார்க்க வில்லையே; அவர்களுடைய இதய ரகசியம், அவர்களுக்கே தெரியாதே ?

ஏதோ, லேசாக சிரித்துக்கொண்டும், அழுது கொண்டும், வம்பளந்துகொண்டும் வேலைசெய்து கொண்டிருக்கிறார்கள். தினசரி கோவிலுக்குப் போகிறார்கள், விளக்கேற்றுகிறார்கள், ஆற்றிலி ருந்து தண்ணீர்கொண்டு வருகிறார்கள்.

எனது காதல் துணையற்று வெட்கித் தவிக் காமல் தப்பித்துக்கொள்ளும் என்றே நான் நம்பு கிறேன், ஆனால் நீ உன் முகத்தையே திருப்பிக் கொள்ளுகிறாயே?

ஆம், உனது பாதை உன் முன் திறந்தே கிடக் கிறது, ஆனால் நான் திரும்பிவர முடியாதபடி செய்துவிட்டாய்; இப்படித் தொடர்பான பாதையை வெட்டிவிட்டால், உலகின் முன் நான் கேவலமடைய லாமா? உலகம், கண்கொட்டாமல் என்னையே உற் றுக்கவனிக்கிறதே, இரவும் பகலும்! ஐயோ, என் செய்வேன்?

## 57

ஓ, உலகமே! உன் மலரையே நான் பிடுங்கிவிட் டேனே!

அம்மலரை நான் என் இதயத்தில் ஒட்டி அழுத் தியதும், முள் குத்திவிட்டதே!

நாள் மங்கி அந்தி மாலை வந்ததும், இருட்டவே, அம்மலர் வாடி விட்டதென்றும், வேதனையே மிஞ்சி நின்றது என்றும் நான் உணர்ந்தேன்,

ஓ, உலகமே! மணத்தோடும் அகந்தையோடும் பல மலர்களின் கூட்டமே உன்னிடம் தோன்றும்.

ஆனல் எனக்கு பூக்கொய்கின்ற நேரம் போய் விட்டது; இருண்ட இரவிலே, நான் ரோஜா மலரையே இழந்து வேதனையையே அனுபவிக்கிறேன்.

## 58

ஒரு நாட்காலையில், பூந்தோட்டத்தில், ஒரு குருட்டுப் பெண், தாமரை இலையிலே சுருட்டி ஒரு மலர் மாலையைத் தந்தாள். நான் அந்த மாலையை என் கழுத்தில் அணிந்தேன்; என் கண்களில், நீர்த் துளிகள் மல்கி நின்றன.

நான் அவளை முத்தமிட்டுவிட்டுச் சொன்னேன்: ''மலர்களைப் போல, நீயும் குருடாகவே இருக்கிருயே! நீ அன்பளிப்பாகத் தந்த மலர் மாலையின் அழகை, நீயே அறிந்துகொள்ளவில்லையே!''

## 59

ஓ, பெண்ணே! உன்னைப்பற்றி நினைத்தாலே, நீ கடவுனின் சிருஷ்டி மாத்திரமல்லவே! மனிதர்களும் உன்னை அலங்கரிக்கவே முன் வந்து நிற்கிருர்கள்; தங்கள் இதயங்களிலிருந்து அழகையும் உனக்கு அணியாகத் தந்தே அலங்கரிக்க முன் வருகிருர்களே!

கவிஞர்கள், தங்கள் கற்பனையின் பொற்கதிர்களால் உவமையணிகள் நெய்து தருகிருர்கள்; சித்

திரக்காரர்கள், உங்கள் அழகுக்குப் பலவித வனப்பு வடிவங்கள் தந்து தங்களைச் சாகாவரம் பெற்றவர் களாகவே சிருஷ்டி செய்து வருகிறார்கள்.

கடல், தனது முத்துக்களாலும், சுரங்கம் தனது தங்கத்தாலும், கோடையிலே பூந்தோட்டங்கள் தங்கள் மலர்களாலும் உங்களையே அழகுபடுத்துகின் றனவே! இத்தகைய அலங்காரங்களால், உங்கள் அழகை அதிக மதிப்பிடக்கூடியதாகவே செய்கின் றனவே!

ஆர்வம் நிறைந்த மனித இதயங்களின் ஆசை, உங்களின் இளமை எழிலின்மேல் ஒளிவீசிக்கொண் டிருக்கிறதே!

நீங்கள் இவ்வளவு அழகாய் மின்னலிடும்போது, உங்கள் வடிவம் ஒரு பாதி பெண்ணாகவும் மறுபாதி கனவாகவுமே காட்சியளிக்கிறதல்லவா?

## 60

வாழ்க்கையின் ஓட்டத்திலும் இரைச்சலிலுமே,

ஓ, அழகே! கல்லிலே மலர்ந்திருக்கும் அழகே, நீ இப்படித் தனியாகவும் எட்டி நின்றும், அமைதி யாகவும் மௌனமாகவும் எப்படி நிலைத்திருக்கின் றாய்?

அழகே! உன் காலடியில், மகாகாலமே மயங்கி நிற்கின்றதே!

“எனது காதலியே,! எனது மணப் பெண்ணே! என்னோடு இன்பமாய்ப் பேசுவாயா?” என்று காலமே கேட்கிறது.

ஆனால், கல்லிலே மலர்ந்து நீ மௌனம் சாதிக்கிறாயே, ஓ, கல்நெஞ்சம் படைத்த அழகே!

## 61

என் இதயமே! அவசரப்படாதே, அமைதியாயிரு; பிரியும் நேரம் இன்பமாயிருக்கட்டும்.

அது பொருளற்ற மரணமாக முடியாமல், வாழ்வை நிறைவிக்கும் முடிவாகவே முடியட்டுமே!

காதல், ஞாபகத்திலே உருகி நிற்கட்டும்; துன்பம், பாட்டாகவே மலரட்டுமே;

கூட்டைவிட்டு வெளியே சிறகைமூடி, ஆகாயத்திலே பறக்கட்டும்;

இரவின் மலர்போல, உனது மலர்க்கரங்களின் இறுதி ஸ்பரிசம், அமைதியாக உறுத்தாமலிருக்கட்டும்;

ஓ, அழகான முடிவே! இன்ப இறுதியே! ஒரு நிமிஷம் நின்று, மௌனமாகவே உனது இறுதி மொழியைச் சொல்லிவிட்டுச் செல்வாயாக!

நான் உன் முன் வணங்கி நின்று, உனக்கு வழி காட்டவே எனது விளக்கையும் தூக்கிப்பிடிக்கின்றேன்.

## 62

எனது முன் ஜன்மத்தில் என் காதலியாக இருந்த பெண்ணைத் தேடி, ஒரு கனவின் மங்கிய பாதையிலே சென்றேன்;

ஒரு மனித சஞ்சாரமற்ற வீதியின் முனையிலே அவள் வீடு இருந்தது;

குளிர்ந்த அந்திக் காற்றில், அவள் பாசமாய் வளர்த்த மயில் ஒன்று உட்கார்ந்து உறங்கிக்கொண்டிருந்தது; கோழிக்குஞ்சுகள் மூலையில் மௌனமாகவே இருந்தன.

அவள் கதவண்டை விளக்கை வைத்துவிட்டு என் முன் நின்றாள்.

அவளுடைய விசால விழிகளை உயரத் தூக்கிக் கொண்டு, என்னையே மௌனமாகக் கேட்டாள்;

"எனது நண்பரே, நீங்கள் சுகந்தானா?"

நான் பதில் பேசவே முயன்றேன், ஆனால் எங்கள் காதல் மொழியை, நாங்கள் மறந்தே இழந்து விட்டோமே?

நான் மீண்டும் மீண்டும் சிந்தித்தேன், சிந்தித்தேன்; எங்களுடைய பழைய பேர்கள், என் ஞாபகத்திற்கு வரவே இல்லை.

அவளுடைய கண்களில், நீர்த்துளிகள் பெருகி மின்னின; என்னிடம அவள் தனது வலதுகையை நீட்டினாள்; நான் அவள் கரத்தைப் பிடித்துக் கொண்டு, மௌனமுற்றேன்.

அந்தியில், எங்கள் விளக்கு துடித்து மறைந்தது.

## 63

பிரயாணியே! நீ போகத்தான் வேண்டுமா? இரவு அமைதியாக இருக்கிறது; இருட்டு காட்டிலே மெய்மறந்து உறங்குகிறது.

நமது வராந்தாவிலே, விளக்குகள் பிரகாசிக்கின்றன; மலர்கள், புதிய மலர்கள்; இளமை ததும்பும கண்கள் விழித்திருக்கின்றன.

உனது பிரிவுக்கு நேரம் வந்துவிட்டதா? பிரயாணியே, நீ போகத்தான் வேண்டுமா?

எங்கள் கெஞ்சி மன்றாடும் கரங்களால், உங்கள் பாதங்களை நாங்கள் கட்டிப்போடவில்லை.

உனது கதவுகள் திறந்துகிடக்கின்றன; உனது குதிரை, வெளிகேட்டில், சேணமிட்டுத் தயாராகவே இருக்கிறது.

நாங்கள் பாடும்போது, எங்கள் பாடல்களே உங்கள் பிரயாணத்தைத் தடை செய்திருக்கலாம்.

உங்களை இழுத்து நிறுத்தியது, வேறு ஒன்றுமல்லவே,—எங்கள் கண்கள் தான்!

பிரயாணியே, உங்களை இங்கே நிறுத்திவைக்க முடியாமல், பரிதாபகரமான நிலையில் நாங்கள் இருக்கிறோம். எங்களிடம் எஞ்சி நிற்பது, கண்ணீர்த் துளிகள் தான்.

உங்கள் கண்களில் மின்னலிடுகின்ற அணைக்க முடியாத கனல்தான், என்ன? உனது இரத்தத்தில் சுழன்றோடுகின்ற ஓய்வற்ற ஜ்வரம், என்ன? சொல்ல முடியுமா?

இருட்டிலிருந்து, உன்னைத் தூண்டி அழைப்பது என்ன?

விண்ணிலே, நட்சத்திரங்களிடையே, நீ படிக்கும் பயங்கரமான மந்திரம்தான் என்ன? அதனல்

தானே, இரவு அதிசயமான ரகசியத்துடன் மௌன மாகவே உன் இதயத்தில் புகுந்து வேடிக்கை செய் கின்றது!

இன்பச் சந்திப்புக்களை நீயும் அலட்சியம் செய் தால், உனக்கு சாந்தி வேண்டுமானால், களைத்த இத யமே! நாங்களும் எங்கள் விளக்குகளையே அணைத்து விட்டு, வீணுகானத்தையும் நிறுத்திவிடுகிறோம்.

இலைகளின் ஓசையினூடே நாங்கள் இருட்டில் அமைதியாக உட்கார்ந்துகொள்வோம்; களைத்துப் போன சந்திரனும், உன் ஜன்னலிலே வெள்ளிய கதிர்களை அள்ளி வீசுவான்.

ஓ, பிரயாணியே! நடுநிசியின் இதயத்தினின்று, எந்த உறங்கா உணர்ச்சி உன் உள்ளத்தையே தொட்டு நிற்கின்றது, சொல்வாயா?

## 64

வீதியில் பொசுக்கும் மணலில், நான் பொழு தைப் போக்குகிறேன்.

இப்போது, குளிர்ந்த அந்திநேரத்தில், சத்தி ரத்தின் கதவை நான் தட்டுகிறேன்; அது ஜன சஞ்சாரமற்று பாழடைந்து கிடக்கிறது.

ஒரு குரூரமான 'ஆஷாத்' மரம், சுவரின் வெடிப்புக்களின் வழியாக, தனது பசிக்கும் கூரிய வேர்க்கொடிகளைச் செலுத்திக் கொண்டு நிற்கிறது.

சில நாட்களில் முன், வழிப்போக்கர்கள் களைத் துப்போய் தங்கள் கால்களைக் கழுவ இங்கே வருவ துண்டு.

சந்திரன் கிளம்பும்போது, திறந்த முற்றத்தில் அவர்கள் பாய்களை மங்கிய ஒளியில் விரித்துக் கொண்டு, உட்கார்ந்து கொண்டு பல புதிய தேசங் களைப் பற்றி பேசுவார்கள், அவர்கள் காலையில் தூங்கி எழுந்ததும், புதிய உணர்ச்சியுடன் பட்சிகள் பாடி இன்பம் ஊட்டின. சிநேகப் பான்மையோடு, மலர்கள் தலையசைத்தன.

ஆனால் நான் இங்கு வரும்போது, யாரும் என்னை விளக்கேற்றி வரவேற்கவில்லை. அந்தி விளக்கின் இருண்ட புகைப்படங்கள், சுவரையும் கருப்பாக்கி, குருட்டுக் கண்கள் போல என்னையே உற்று நோக்கின.

காய்ந்த குட்டையின் அருகே, புதரினுள் மின் மினிப் பூச்சிகள் மின்னிப் பறந்தோடின. புல் மண் டிய நடைபாதையில், மூங்கில் கிளைகள், தங்கள் நிழல்களை வாரி இறைத்தன.

இன்றைய தினமுடிவில், நான் யாருடைய விருந்தாளியுமல்ல.

என்முன், நீண்ட இரவு படர்ந்து விரிகிறது; நான் களைத்துப்போய் விட்டேன்.

## 65

மீண்டும் உனது அழைப்புத்தானா? அந்திமாலை வந்துவிட்டது. கெஞ்சி நிற்கும் காதல் கரங்கள் போல, களைப்பு என்னையே சுற்றிப் பற்றிக்கொள்ளு கிறது.

நீ என்னை அழைக்கின்றாயா? கொடிய தலைவியே! பகலெல்லாம, உனக்கே தந்து விட்டேனே? இரவையுமா, நீ என்னிடமிருந்து கொள்ளையடிக்க வேண்டும்.

எங்கோ, எதற்கும் ஒரு முடிவு இருக்கிறது;

இருளைக் கிழித்துக் கொண்டு, உன குரல் என் நெஞ்சைச் சுடுகின்றதே.

அந்தி வேளையிலே, உன் வாசலண்டை தூக்கத்திலிருந்து எழுகின்ற இன்பநாதம் ஒலிக்காதா?

உனது கருணையற்ற மண்டபத்துக்கு மேலே, மௌனச் சிறகோடு நட்சத்திரங்கள் விண்ணிலே ஏறிச் செல்லவில்லையா?

உனது பூந்தோட்டத்தில், மிருதுவான மரணத்தில் மலர்கள் மண்ணில் விழுந்து மடியவில்லையா?

ஏ! அமைதியற்ற தோற்றமே, நீ என்னையும் அழைக்க வேணடுமா?

அப்படியானால் காதலின் சோகக் கண்கள், இதையெல்லாம் கவனித்து அழுது கதறட்டும்.

இந்தத் தனி இல்லத்தில், விளக்கு எரிந்து கொண்டே யிருக்கட்டும்.

களைத்துப்போன கூலியாட்கள், படகேறி ஆற்றைக் கடந்து வீடு திரும்பட்டும்.

நானும் எனது கனவுகளைப் பின்னே விட்டு விட்டு, உனது அழைப்பை நோக்கி விரைந்தே வருகிறேன்.

## 66

ஒரு பித்துப் பிடித்தவன், வீதி நெடுகே ஜடா முடியுடனும், காஷாய உடைதாங்கி, மெலிந்த புழுதி படிந்த மேனியுடனும் வீதியிலே அலைகிறான்; அவன் உதடுகள் இறுக மூடிக்கிடக்கின்றன; அவன் இதயமும் மூடிக்கிடக்கிறது; மினமினிப்பூச்சி தனதுகாதல் துணையைத் தேடிச் செல்வதுபோல், அவனுடைய கண்களும் காதற் குறியோடு மின்னலிடுகின்றன; அவனும் உரை கல்லைத் தேடி அலைந்தான்;

அவன் பார்வையிலே, முடிவற்ற கடலும் கர்ஜனை செய்தது.

கடலின் புதைபொருளைப் பற்றி அலைகள் அளவுக்குமிஞ்சி முடிவின்றிப் பேசித் தீர்த்தன; புதைபொருளின் அருமையை உணராத அறிவிலிகளின் அறியாமையைப் பற்றியும், அலைகள் பேசிக்கொண்டன.

நம்பிக்கை இழந்த நிலையில், அந்தப் பித்தன் மன சஞ்சலத்துடன் ஓய்வற்றுத் தேடவே புறப்பட்டான்.

தொட முடியாத விண்ணை நோக்கி, கடல் தனது ஆர்வக் கரங்களை எழுப்பிக் கூச்சலிடுகிறது; தொட முடியாத முடிவை நோக்கி, நட்சத்திரங்கள் சுற்றிச் சுற்றி அலைகின்றன; அதேபோல, ஜடாமுடி தரித்த காஷாயதாரியும், கடற்கரை யோரத்தில் நின்றுகொண்டு, புதைபொருளான மந்திர சக்தி வாய்ந்த உரை கல்லை நோக்கி அலைந்தே திரிந்தான்.

ஒரு நாள் ஒரு கிராமப் பையன், அவனைக்கேட்டான்: "உன் இடுப்பிலிருக்கும் இந்தத் தங்கச் சங்கிலி, உனக்கு எங்கிருந்து கிடைத்தது, சொல்வாயா?"

பித்தன் திடீரென்று அதிர்ந்தான்; ஒரு காலத்தில் இரும்பாயிருந்த சங்கிலி, இப்போது உண்மைத் தங்கமாகவே மாறிவிட்டதே; இது ஒரு கனவு அல்ல; ஆனால் இந்த மாற்றம் எப்போது நிகழ்ந்தது என்பது, அவனுக்கே தெரியாது.

ஐயோ! அவன் தலையில் அடித்துக் கொண்டு, தன்னறிவில்லாமலே எப்படி இந்த வெற்றி கிடைத்தது என்று சிந்திக்கலானான்?

கூழாங் கற்களைப் பொறுக்குவதும், சங்கிலியைத் தொடுவதும், அவனுக்கு நித்திய பழக்கமாகவே போய்விட்டது; மீண்டும் என்ன மாறுதல் வந்துவிட்டது என்பதையே கவனியாமல், கற்களைக் கடலில் எறிந்து விடுவதும் வழக்கமாகி விட்டதே; இப்படித்தான், இந்தப் பித்தன் உரை கல்லான மாயக்கல்லைக் கண்டெடுத்தும் இழந்து விட்டானே!

சூரியன் மேற்கே இறங்கி அஸ்தமித்தான்; ஆகாசம் தங்கமயமாகவே மின்னியது.

கீழே தலைகீழாய்ச் சாய்ந்த மரம்போல, அந்தப் பித்தன் கால்நடையாகவே வந்து, பலங்குன்றி உடல் கூனி; இதயம் இழந்து, தான் இழந்த மாயக்கல்லை மீண்டும் தேட ஆரம்பித்தான்.

## 67

அந்தி மாலை மெதுவாக வந்து கொண்டிருக்கிறது; சகல பாடல்களும் நிற்கும் நேரம் வந்துவிட்டது.

உனது தோழர்கள் ஓய்வெடுத்துக் கொள்ளப் போய்விட்டார்கள்; நீயே களைத்துப்போய் விட்டாய்;

இருட்டிலே, எங்கும் பயம் குடிகொண்டிருக்கிறது; ஆகாசத்தின் முகமே மூடித் திரையிட்டிருக்கிறது;

இருந்தாலும், ஓ எனது பட்சியே! நான் சொல்வதைக் கேள், சிறகை மூடாதே!

அங்கே தெரிவது காட்டின் இலைக்கூட்டத்தின் இருண்ட தோற்றமல்லவே: ஒரு இருண்ட கரிய பாம்புபோல, கடலே கொந்தளிக்கிறது.

மலர்கின்ற மல்லிகையின் நடனமல்லவே அது,- அதுவே மின்னலிடும் நுரைக்காட்சி.

ஆ! எங்கே, சூரியக்கதிர் படர்ந்த பச்சைக் கடலின் கரை எங்கே? உனது கூடு எங்கே?

ஓ, பட்சியே, நான் சொல்வதைக்கேள், பறக்கும் இறக்கைகளை மூடாதே!

உன் பாதையிலே, இரவே தனிமையிலே கிடக்கிறது; அருணோதயம், இருண்ட குன்றுகளின் பின் உறங்குகிறது.

மணியோட்டத்தை எண்ணிக்கொண்டு, நட்சத்திரங்கள் மௌனம் சாதிக்கின்றன; மங்கலான

சந்திரன், இரவின் ஆழத்திலே நீந்திக்கொண்டு வருகிறது.

ஓ, கானப் பட்சியே, நான் சொல்வதைக் கேள்— சிறகை மூடாதே.

உனக்கு நம்பிக்கையோ, பயமோ இல்லை;
சொல்லில்லை, ரகஸியமில்லை, குரலும் இல்லை;
வீடில்லை, ஓய்வுப் படுக்கையுமில்லை.

உன்னிடமிருப்பது, இரட்டைச்சிறகும்,வழியற்ற ஆகாசமும்தான்!

பட்சியே! நான் சொல்வதைக்கேள், உன்சிறகை மூடாதே!

## 68

சகோதரனே! ஒருவரும் என்றும் வாழ்வதில்லை, எதுவும் அழியாமல் நிலைப்பதில்லை. இதையே மனதில் நினைத்துக்கொண்டு, சந்தோஷமாயிரு.

நமது வாழ்க்கை, பழைய ஒரே சுமையுமல்ல; நமது பாதை, ஒரே நீண்ட பிரயாணமுமல்லவே.

ஒரே பழைய பாட்டை மாத்திரம், ஒரு கவிஞன் பாடிக்கொண்டிருப்பதல்லவே!

மலரே காய்ந்து கருகி மடிகிறது; ஆனல் அந்த மலரை அணிந்திருப்பவர் அதைப்பற்றி ஒருபோதும வருந்தி அழுவதில்லையே!

சகோதரனே! இதையே நன்ருய் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, ஆனந்தமாயிரு.

பரிபூரணத்தை இசையாக செய்வதற்கு, முன்னதாகவே ஒரு முழு நிறுத்தம் வந்தாக வேண்டும்.

அஸ்தமனத்தையே நோக்கி வாழ்க்கையே, வாடி வாடிப் பின் தங்க நிழல்களிலே மூழ்கி விடுகிறது.

விளையாட்டிலிருந்து காதலையே அழைத்து, துன்பத்தையே குடிக்கச் செய்ய வேண்டும்.

சகோதரனே, இதையே நினைந்து நினைந்து, இன்புற்றிருப்பாயாக!

காதல் உலகிலே, காலதாமதம் ஏற்பட்டால், அனுபவிக்க வேண்டிய முத்தங்களை நாம் இழந்து துடிக்க நேரிடும்; முத்தமிடும்போது நமது உடலிலே இரத்தம் இன்பமாய்த் துடிக்கிறது. இன்ப வெறியிலே கண்கள் ஒளி வீசுகின்றன.

நமது வாழ்க்கை ஆர்வங்கொண்டது; நமது ஆசைகள் கூர்மையானவை; ஏனெனில், நமது பிரிவைக்குறித்து, காலம் வேதனையுடன் மணியடிக்கிறது.

சகோதரனே, இதையே நினைத்து நினைத்து சந்தோஷமாயிரு.

ஒரு பொருளைத் தழுவி, அதையே கசக்கி மண்ணில் எறிவதற்கு நமக்குப்போதியநேரம் இல்லையே!

மணிகள் பறக்கின்றனவே, காலவிளிம்புகளில் கனவுகள் ஒளிந்து கொள்ளுகின்றனவே.

நமது வாழ்க்கை மிகக் குறைந்த கால அளவு உள்ளது: அதிலிருந்து காதலுக்கே சில நாட்கள் தான் கிடைக்கின்றன.

உழைக்கவும் அடிமை வேலை செய்யவுமானால், காலம் முடிவற்று நீண்டுகொண்டே வரும்.

சகோதரனே, இதையே நினைத்து இன்புற்றிருப் பாயாக!

அழகே, நமக்கு இனிமை தருகின்றது; நமது வாழ்வின் நாதத்தோடு இசைந்து கூத்தாடுவதும் அழகுதானே!

அறிவு, மதிக்க முடியாததுதான்; ஏனென்றால், அறிவின் குறையை பூர்த்திசெய்ய நமக்குக் காலம் போதாது.

என்றும் அழியாத விண்ணிலே எல்லாம் முடிந்து பூர்த்தியடைகிறது.

மரண விந்தையால், பூமியில் மலர்கின்ற மாய மலர்கள் என்றும் புதுமையுடன் மின்னலிடுகின்றன.

சகோதரனே! இதையே என்றும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, இன்புற்றிரு.

## 69

நான் பொன்மானை வேட்டையாடுகிறேன்.

என் தோழர்களே! நீங்கள் சிரிக்கலாம், இருந் தாலும், என்னை ஏமாற்றி ஓடுகின்ற மாய வடிவத் தையே நான் பின்தொடர்கிறேன்.

எங்கும் மேடு பள்ளங்கள் தாண்டி, பல அறியா தேசங்களின் வாயிலாகவே நான் அலைந்தலைந்து, பொன் மானையே வேட்டையாடுகிறேன்.

நீங்கள் சந்தைக்கு வந்து, சாமான்களை வாங்கிக் கொண்டு வீடுதிரும்புகிறீர்கள். ஆனால், அலைகின்ற காற்றின் மோகன சக்தி என்னை எங்கோ எப்பொழுதோ தொட்டுவிட்டதே!

என் நெஞ்சில் கவலையே இல்லை; என்னுடைய சகல பண்டங்களையும், நான் பின்னால் விட்டுவிட்டேன்.

மலைகளையும் வயல்களையும் தாண்டி அறியா தேசங்களின் வழியெல்லாம் அலைந்தலைந்து, பொன் மானையே நான் வேட்டையாடிச் செல்கிறேன்.

## 70

நான் குழந்தையாக இருக்கும்போது, காகிதப் படகு ஒன்று செய்து, வாய்க்காலில் மிதக்கவிட்டேன். இதை இன்றும் மறக்காமல் ஞாபகத்தில் வைத்திருக்கிறேன்.

அன்று ஆடிமாத அடைமழை; நான் தனியாகவே நின்று இந்த விளையாட்டை இன்பமாகவே அனுபவித்தேன். வாய்க்காலில், காகிதப்படகை மிதக்கவிட்டேன்.

திடீரென்று, புயல் மேகங்கள் நெருங்கிக் குழுமின; புயல் காற்று சுருண்டு அடித்தது; மழை வெள்ளமாகக் கொட்டியது.

சேறு குழம்பிய தண்ணீர் வேகமாக ஓடிவந்தது; ஓடை பெருக்கெடுத்தது, என் படகைக் கவிழ்த்து விட்டது.

எனது இன்பத்தைக் கெடுக்கவே, புயல் இவ்வாறு சூழ்ச்சிசெய்திருக்கிறதுஎன்று நான வேதனையுடன் சிந்தித்து வருந்தினேன்; எனக்கு விரோதமாக, ஏன் இந்தக் கொடிய புயல் கிளம்பியது?

ஆடிமாத அடைமழையில், இன்றைய தினம் நீண்டு வருகிறது. வாழ்க்கையின் பல விளையாட்டுக்களிலும் நான் இழந்து தோல்வியடைந்த சந்தர்ப்பங்களையே நினைந்து நினைந்து வருந்தினேன்.

கானிலே காகிதப்படகு கவிழ்ந்ததை நினைந்து நினைந்து, விதி என்மேல் எத்தனையோ கொடுமைகளை இழைத்த தந்திரங்களையே நினைத்து, நான் என் தலைவிதியையே நொந்து கொண்டேன்.

## 71

நாள் இன்னும் முடியவில்லை, சந்தை கலையவில்லை, ஆற்றங்கரையிலே உள்ள சந்தை!

எனது காலத்தை வீணகச் செலவழித்துவிட்டேன் என்றும், இறுதிப் பணத்தையும் இழந்துவிட்டேனே என்றும், நான் பயந்தேன்.

ஆனுல், அப்படியில்லை; இன்னும் என்னிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது. என் தலை விதி என்னை அடியோடு மோசம் பண்ணி விடவில்லை.

விற்பதும் வாங்குவதும் முடிந்தது. இரு தராப் பிலும் சேர்த்து வசூல் செய்துகொண்டு, வீடு திரும் பும் நேரமே வந்துவிட்டது.

ஆனால், வாசலில் உள்ள காவலாளியே! நீ என் னிடமிருந்து ஏதாவது வரிவசூல் எதிர்பார்க்கிறாயா?

நீ கவலைப்பட வேண்டாம், என்னிடம் இன்னும் கொஞ்சம் பணம் இருக்கிறது, விதி என்னை அடி யோடு ஏமாற்றி விடவில்லை. வெளியேஉள்ள அமை தியைப் பார்த்தால், பயங்கரப் புயல் வருமோ என்று தோன்றுகிறது. மேற்கே கவிந்த மேகங்கள், திமை யையே சுட்டிக்காட்டுகின்றன.

அமைதியான ஜலம், புயலையே எதிர்பார்க் கிறது. இரவு வந்து என்னைச் சூழ்ந்துகொள்வதற் குள், நான் ஆற்றைக் கடந்து செல்லவே அவசரப் படுகிறேன்.

ஏ படகுக்காரா, ஏற்றிவந்த கூலி வேண்டுமா?

ஆம், சகோதரரே, என்னிடம் இன்னும் கொஞ் சம் பணம் இருக்கிறது. என் விதி, என்னை அடி யோடு ஏமாற்றி விடவில்லை.

வீதி ஓரமாய், மரத்தின் கீழ் பிச்சைக்காரன் உட்கார்ந்திருக்கிறான். பயந்த நம்பிக்கையுடன், ஐயோ, அவன் என்னையே உற்றுப் பார்க்கிறான்.

இன்றைய தினம் நான் லாபமடைந்து பணக் காரனாகிவிட்டதாகவே, அவன் நினைக்கிறான்.

ஆம், தம்பி, என்னிடம் இன்னும் கொஞ்சம் பணம் இருக்கிறது.

என் விதி, என்னை அடியோடு மோசம் செய்து விடவில்லை.

இரவு வளர்ந்து இருட்டியது. வீதி ஜனசஞ்சாரமற்று வெறிச்சென்று கிடந்தது. இலைகளினூடே, மின்மினிப் பூச்சிகள், மின்னிப் பறந்தன.

என் பின், மௌனமாக மறைவாகத் தொடர்ந்து வருபவன் நீ யார்?

ஓ, எனக்குத் தெரியுமே! என்னுடைய லாபத்தை யெல்லாம் என்னிடமிருந்து கொள்ளையடிக்கவே நீயும் ஆசைப்படுகிறாய். நானும் உனக்கு ஏமாற்ற மளிக்க மாட்டேன்.

ஏனெனில், இன்னும் என்னிடம் கொஞ்சம் பணம் இருக்கிறது. என் தலைவிதி, என்னை அடியோடு ஏமாற்றி விடவில்லையே!

நள்ளிரவில், நடுநிசியில், நான் வீடு திரும்புகிறேன். என் கைகள், காலிதான்.

உறங்காமல், மௌனமாகவே, கதவண்டை நீ எனக்காகவே காத்துக்கொண்டிருக்கிறாய்.

நடுங்கி நிற்கும் பறவைபோல, ஆசைக்காதலும் நாணமும் கலந்த பார்வையுடன் நீ என் மார்பிலே வந்து சாய்கின்றாய்.

ஆ, எனது கடவுளே, இன்னும் அதிகம் எஞ்சி நிற்கிறது, என் விதி, என்னை அடியோடு மோசம் பண்ணிவிடவில்லையே!

## 72

தினந்தோறும் கடுமையாகவே உழைத்து உழைத்து, ஒரு கோயிலை எழுப்பினேன்; அதில் கதவுகளோ ஜன்னல்களோ கிடையாது; பெருங் கற்களால், சுவர்களை கெட்டியாகக்கட்டிமுடித்தேன்.

நான் சகலத்தையும் மறந்து விட்டேன், உலகையே வெறுத்தேன், பீடத்தில் நான் ஏற்றிவைத்த விக்கிரகத்தையே ஆழ்ந்து உற்று நோக்கினேன்.

உள்ளே என்றும் இரவுதான்-, இருட்டை விலக்க, வாசனையூட்டிய எண்ணெயில் எரிகின்ற விளக்குகள் கொளுத்தி வைக்கப்பட்டன.

முடிவற்ற சாம்பிராணிப் புகை, சுருண்டு சுருண்டு, என் இதயத்தையே சுற்றிச் சூழ்ந்து கொண்டது.

உறங்காமலே, கோவில் கட்டி அவற்றில், கற்பனை உருவங்களை, மனந்தடுமாறும்படியானநிலையில், தோண்டிவைத்தேன்-, இறக்கையுள்ள குதிரைகள், மனித முகங்களோடு கூடிய மலர்கள், பாம்பின் அவயவங்களைக் கொண்ட பெண் வடிவங்கள்.

பட்சிகளின் பாடல்களோ, இலைகளின் சலசலப்போ, உழைக்கும் கிராமத்தின் ஜனக்குரலோ, கோவிலின் உள்ளே நுழைந்து வரக்கூட, எந்தப் பாதையும் விட்டு வைக்க வில்லை.

அதன் இருண்ட வளைந்த மாடத்திலே, நான் ஓதிய மந்திர முணுமுணுப்பைத் தவிர, வேறொன்றும் ஒலிக்கவே இல்லை.

கூரிய தித்திரிபோலவே, என் மனம் கூர்மைப் பட்டது; எனது புலன்கள் அனைத்தும், பெருமகிழ்ச் சியில் மயங்கிக் கிடந்தன.

கோயிலின் மேல் சுடுமையான இடியே விழுந்து என் இதயத்தில் வேதனை தைக்கும்வரை, எப்படிப் பொழுது போனது என்பதே எனக்குத் தெரியாமல் மயங்கிக் கிடந்தேன்.

விளக்கே வெளுத்து வெட்கி நின்றது; சுவரின் மேல் எழுந்த சித்திரங்கள் அனைத்தும், வெளிறிய விளக்கொளியிலே கனவுச் சங்கிலி போலப் பொரு ளற்று விழித்தன.

பீடத்தில் உள்ள விக்கிரகத்தையே, நான் உற்று நோக்கினேன்; விக்கிரகமே, வாய் விட்டுச் சிரித்துப் புன்முறுவல் பூத்து நின்றது. அப்போது தான் இந்த உருவம் இறையின் உயிர்த்தொடர் போடு காட்சியளித்தது. நான் பூட்டிவைத்த சிறைப் பட்ட இரவு, சிறை விரித்துப் பறந்தோடியது.

## 73

மங்கலான புழுதி மண்டிய பூமா தேவியே! கட் டுக் கடங்காச் செல்வம் உனதல்லவோ!

உன் குழந்தைகளின் வாய் நிறைய உணவு வழங்கவே, நீ கஷ்டப்பட்டு உழைக்கின்றாய்.

நீ எங்களுக்குத் தரும் சந்தோஷ அன்பளிப்பு, பூர்ண மடையாமல் குறைவாகவே இருக்கிறது.

உன் குழந்தைகளுக்கு நீ செய்யும் பொம்மைகள், விளையாட்டுக் கருவிகள், உடைந்தே சிதறிப் போகின்றனவே.

எங்களுடைய பசி போன்ற ஆசைகள் அனைத்தையும், உன்னால் தந்து எங்களைத் திருப்தி செய்ய முடியாது; அதற்காக, உன்னை நான் அலட்சியமாகக் கைவிடலாமா? என்ன?

துன்பம் கலந்த உன் புன்முறுவல் என் கண்களுக்கு இன்பம் தருகின்றது.

நிறைவேற்ற முடியாத உனது அன்புக் காதல், என் இதயத்தில் இன்பம் பாய்ச்சுகிறது.

உன் மார்பிலிருந்து, நீ எங்களுக்குப் பாலூட்டி வளர்த்து உயிர் தந்திருக்கிறாய், உண்மைதான்! ஆனால், எங்களுக்குச் சாகாத அமர நிலையைத் தந்துவிட வில்லையே! அதனால் நீ என்றும் கவலையுடன் கண்விழித்து எங்களைக் காப்பாற்ற விரும்புகிறாய்.

எத்தனையோ யுகங்களாக, பாட்டாலும் வருணத்தாலும் நீ வேலை செய்து வந்திருக்கிறாய்; இருந்தாலும், உனது சொர்க்கம் இன்னும் கட்டப்பட வில்லையே! விண்ணின் துன்பச் சாயைதான், தோன்றுகிறது!

உனது அழகான சிருஷ்டிகளிலெல்லாம், கண்ணீர்த் துளிகள் மூடுபனி போலவே மூடிக்கொண்டிருக்கின்றனவே!

உனது காதலுக்குள் எனது காதலேயும், உனது ஊமை இதயத்திலே எனது பாடல்களேயும் கொட்டியே முழக்குகிறேன், சரியா?

நானும் உறுதியாக உழைத்தே உன்னேப் பூஜிப்பேன்.

உனது மிருதுவான முகத்தை நான் பார்த்திருக்கிறேன்; உனது துன்பத் தூசியில் உழைக்கவே ஆசைப்படுகிறேன்.

தாயே! மண் மாதாவே!

## 74

உலக கொலு மண்டபத்தில், ஒரே இரத்தினக் கம்பளத்தின் மேல்தான், சாதாரண புல்லிதழும், சூரியக்கதிரும், நள்ளிரவிலே நக்ஷத்திரங்களும் வீற்றிருக்கின்றன.

அது போலவே, மேகநாதத்துடனும் கானக கீதத்துடனும் என் பாடல்கள் உலக இதயத்திலே இடம்பெறுகின்றன.

ஆனல் செல்வச் செருக்கடைந்த மனிதனே! கதிரவனின் இன்பகரமான பொற்கதிரோடும், சிந்திக்கும் சந்திரனின் சாந்தமான கனிந்த கதிரொளியோடும், உனது செல்வம் பகட்டின்றிச் சாதாரணமாக இடம் பெறுவதில்லேயே.

உலகளாவிய ஆகாசத்தின் ஆசிகூட, உன் செல்வத்தைத் தொடவில்லேயே!

இறுதி மரணம் நெருங்கும்போது, உனது செல்வம் சோபையிழந்து கருகிப் பொடியாகவே போய்விடுகிறதே!

## 75

நள்ளிரவிலே, வருங்காலத் துறவி சொன்னான்: "இல்லம் துறந்து இறைவனைத் தேட இதுவே நல்ல நேரம். ஆ! இதுவரை எந்த மாயை என்னை இங்கேயே நிறுத்தி வைத்தது?"

இறைவன் இரகசியமாகச் சொன்னார்: "நான் தான்" ஆனால் அந்த மனிதனின் காதுகள் கேட்கவில்லை. அமைதியாக, படுக்கையின் ஒரு புறத்தில் மனைவி உறங்குகிறாள்; அவள் மார்பிலே குழந்தை துயில்கிறது.

மனிதன் சொன்னான், "இவ்வளவு நாளாக, என் மனதைக் கலைத்து என்னை முட்டாளாக்குவதற்கு உங்களுக்கு யார் அதிகாரம் கொடுத்தது?"

அந்தத் தெய்வக்குரல் மீண்டும் சொன்னது: "கடவுள் தான் காரணம." ஆனால், அவன் அதைக் கேட்கவே இல்லை.

கடவுள் கட்டளையிட்டார்: "அறிவிலியே, நில், நில், உனது வீட்டை விட்டுச் செல்லாதே." ஆனால் இதற்கும் அவன் செவிசாய்க்கவில்லை.

கடவுளே பெருமூச்சுவிட்டு வருத்தத்தோடு தெரிவித்தார், "என்ன அதிசயம், என் பக்தன் என்னையே அலட்சியம் செய்துவிட்டு, என்னையே தேடி என் அலைய ஆசைப்படுகிறான்!"

## 76

கோவிலுக்கு முன் சந்தை கூடியது. காலையி லிருந்தே மழை கொட்டிக்கொண்டிருந்தது. பகலும் முடிந்தது. ஓலையில் செய்த ஊதுகுழல் ஒன்றை காலணவுக்கு வாங்கி அனுபவித்துக்கொண்டிருந்த பெண், சிரித்துக்கொண்டிருந்தாள்; அவள் முகத் தில் புன்முறுவல் பிரமாதமாகவே ஒளி வீசியது. பெருங் கூட்டத்தில் குழுமியிருந்த ஜனத்திரளின் சந்தோஷத்தைவிட, அந்தச் சிறுமியின் புன்முறு வல் எங்கும் ஒளி வீசியது.

அந்த ஊதுகுழலின் நாதவெறி, எல்லோருடைய சிரிப்புக்கும் இரைச்சலுக்கும் மேல் மிதந்து வந்தது.

சந்தையிலே, ஒரு முடிவற்ற ஜனத்திரள் மோதிக்கொண்டு வந்தது; வீதி சேருகக் கிடந்தது; ஆறு வெள்ளமிட்டோடியது. நீரிலே மூழ்கியிருந்த வயல்கள் எல்லாம், ஒரே மழை வெள்ளம்.

இந்தக் கூட்டத்திலே, ஒரு சிறு பையன், ஒரு வருணப் பிரம்பு வாங்க தன் கையில் காலணக்கூட இல்லையே என்று மனங்கலங்கி நின்ருன்; யாருடைய மனக்கவலையும், இந்தப் பையனின் கவலைக்கு நிகராகாது.

கடையிலேயுள்ள அந்த வருணப் பிரம்பையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பைய னின் பரிதாபகரமான கண்களைக் கண்ட சந்தைக் கூட்டம் மனமிரங்கி நின்றது.

## 77

மேற்கு தேசத்திலிருந்து வந்திருக்கும், வேலைக் காரனும் அவன் மனைவியும், செங்கற் காளவாய்க்கு மண் குழைக்க பூமியைத் தோண்டிக்கொண்டிருந் தார்கள்.

அவர்களுடைய சிறு பெண் குழந்தை, ஆற் றோரமாகப் போகிறாள்; பாத்திரங்களை முடிவின்றித் தேய்த்துக் கொண்டு நிற்கிறாள்.

அவள் தம்பி, சிறுவன்; தலைபூராவும் மழுங்கல்; நிறம் கருப்பு. ஆடையின்றிச், சேறு படிந்த உட லோடு அவளுக்குப்பின் செல்லுகிறான்; இந்த மோழை. அவள் ஆக்ஞைப்படி, கரையிலே மேட்டின் மேல் நிற்கிறான்.

அந்தச் சிறுமி, தலையிலே தண்ணீர்க்குடத் தைச் சுமந்துகொண்டு, இடது கையில் பித்தளைத் தவலையை எடுத்துக்கொண்டு, வலதுகையில் குழந் தையை வைத்துக்கொண்டு வீடு திரும்புகிறாள்; வீட்டுக் கவலைச் சுமையுடன், தாயின் ஒரே வேலைக் காரியாகவே, அவள் காட்சியளிக்கிறாள்.

ஒருநாள், இந்த ஆடையில்லாத பையன் கால் களைத் திறந்து போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப் பதை நான் கண்டேன்.

ஆற்றில், அவன் அக்காள், மண்ணால் தண் ணீர்க் குடத்தைத் திருப்பித்திருப்பி விளக்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன்.

ஆற்றங்கரை யோரத்திலே, மிருதுவான ஆட் டுக்குட்டி ஒன்று மேய்ந்துகொண்டிருந்தது.

சிறுவன் இருந்த இடத்திற்கு ஆட்டுக்குட்டி நெருங்கிவந்து, திடீரென்று உரத்துக் கதறியது; சிறுவன் பயந்து அலற ஆரம்பித்து விட்டான்.

சிறுமி, இதைக்கண்டதும், குடத்தைப்போட்டு விட்டு, உடனே ஓடோடிவந்து, தன் தம்பியை ஒரு கையிலும், ஆட்டுக்குட்டியை மற்றொரு கையிலும் தூக்கிக்கொண்டு, இருவரையும் வித்தியாசமின்றி ஒரே சிருஷ்டி அம்சமாகவே கருதி இறுகத் தழுவி முத்தமிட்டாள். ஆட்டுக்குட்டியையும், ஆண் குழந்தையையும் ஒரே அன்போடு தழுவிநின்ற அதிசயம், அதிசயம்தானே!

## 78

இது சித்திரைமாதம், வெயிலில் பகல் முழுதும் நீண்ட நேரம் புழுக்கமாகவே இருந்தது. கொடிய வெப்பத்தால், பூமியே காய்ந்து தண்ணீரின்றித் திணறியது.

ஆற்றங்கரையிலிருந்து ஒரு குரல் அழைத்தது: "எனது செல்வமே, வா வா!"

நான் என் புத்தகத்தை மூடிவிட்டு ஜன்னலைத் திறந்து பார்த்தேன்.

ஒரு பெரிய எருமைமாட்டை, குளிப்பாட்டுவதற்கு ஒரு இளைஞன் ஆற்றுக்கருகே அழைத்துச் செல்கின்றான்: அந்த எருமையின் கண்கள், அமைதியாகவும் பொறுமையாகவும் இருந்தன. இளைஞன், தண்ணீரில் முழங்கால் ஆழத்தில் நின்றுகொண்டு, அந்த அருமையான எருமையைக் குளிக்க அழைக்கின்றான்.

இது ஒரு இன்பமான காட்சியாக இருந்ததால், நானும் சிரித்தேன்; என் இதயத்திலே இந்தக்காட்சி இனித்தது.

## 79

பேசும் பாஷையிலே பேச முடியாத மிருகத்துக்கும், பேசத் தெரிந்த மனிதனுக்கும் உள்ள வித்தியாசங்களின் எல்லைகள் எங்கே ஒளிந்துகொண்டிருக்கின்றன, என்று நான் ஆச்சரியப்படுவதுண்டு.

உலகத் தொடக்கத்திலிருந்த எந்த சொர்க்கத்தின் வழியாக, சிருஷ்டியின் எட்டாத காலம் முதல் மனித இதயமும மிருக உள்ளமும், மிக எளியமுறையில் கலந்து உறவாட ஆரம்பித்தன?

இரு ஜந்துக்களுக்கும் உள்ள மனத்தொடர்பு மறக்கப்பட்ட நிலையிலும், அவர்களுடையதொடர்ந்த நடைப்பழக்கம் இன்னும் அழிய வில்லையே.

இருந்தாலும், திடீரென்று சொல்லற்ற இசையில், மங்கிய ஞாபக சக்தி எழுந்து நின்று பேசுகிறது; அந்த மிருகம் மனிதனுடைய முகத்தைப் பார்த்து அன்புகலந்த நம்பிக்கையுடன் பழகுகிறது; மனிதனும் அன்பு கலந்த ஆச்சரியத்துடன் அதன் கண்களையே பார்த்து நிற்கிறான்.

இந்த இருவரும், மாற்றுடலிலே, நண்பர்களாகவே சந்திக்கிறார்கள். உடல் வேறு என்றும் உள்ளம் ஒன்று என்றும், மிக மங்கலான சிந்தனையுடன் தான் உணர்கிறார்கள்.

## 80

அழகான பெண்களே! தங்களுடைய விழி மின்னல்களால், கவிஞன் வீணையினின்று பாடல் செல்வம் அனைத்தையும் உங்களால் கொள்ளையடிக்கவே முடியும்!

ஆனால், அவர்கள் தங்களுடைய அழகைப் புகழ்ந்து பேசும்போது, நீங்களோ செவிசாய்த்துக் கேட்பதே இல்லை; அதனால்தான், நான் உங்களைப் புகழவே வந்திருக்கிறேன். தங்கள் காலடியிலே, எந்தவணங்காமுடியும் சரணாகதியடைவதுஉண்மை; அத்தகைய ஆற்றல் தங்களுக்கு உண்டு.

புகழேஅறியாத காதலர்களையே நீங்கள் பூஜிக்க விரும்புகிறீர்கள்; அதன் காரணமாக, நான் உங்களையே வணங்கி நிற்கிறேன்.

உங்கள் அழகிய கரங்கள், பரிபூரணமானவை; எந்த அரசனுடைய ஆடம்பரத்துக்கும், அழகும் ஒளியும் தரக்கூடியது உங்கள் கைகளின் இன்ப ஸ்பரிசம்.

இந்த அருமையான கரங்களால் நீங்கள் மாறு பிடித்துக் கூட்டிப் பெருக்கி தங்கள் வீட்டை சுத்தமாகவே வைத்திருக்கிறீர்கள்; இதையே நினைத்துச் சிந்திக்கும்போது, என் நெஞ்சில் வியக்கத்தக்க அன்புகலந்த அச்சம் உண்டாகிறது.

## 81

ஓ, சாவே, எனது மரணமே! என் காதில் அவ்வளவு தாழ்ந்த குரலில் என்ன ரகஸியம் பேசுகிறாய்?

மலர்கள் அந்தி மாலையில் வாடும்போதும், ஆடு மாடுகள் தொழுவத்துக்குத் திரும்பும்போதும், நீ பிறர் கண்ணில் படாமல் இரகசியமாகவே என் பக்கம் வந்து ரகசியம் பேசும்போதும், எனக்கு ஒன்றும் புரியவில்லையே!

ஓ, சாவே, எனது மரணமே! இப்படித்தானா? நீ என்னையே காதலித்து, ஜில்லிடும்படி முத்தமிட்டு, போதை தரும்படி என் உள்ளத்தையே கொள்ளைகொள்ள முயல்கின்றாயே?

நமது திருமணத்திற்கு கம்பீரமான சடங்குகள் ஒன்றுமில்லையா?

உனது சுருண்ட கூந்தலில், மாலை அணிந்து கொள்ள வில்லையா?

உனது கொடியை முன்னே தூக்கிச்செல்ல ஒருவரும் வரவில்லையா? உனது செந்நிறத் தீவத்திகளைக் கண்டு இரவே தீப்பந்தமாகவே காட்சியளிக்காதா? ஓ, சாவே, எனது மரணமே!

உறங்கா நடுநிசி இரவிலே, உனது சங்கொலி முழங்க வருக! வருக!!

என்னை ஆழ்ந்த செந்நிற ஆடையில் ஆலங்காரம் செய்! என் கையைப் பிடித்து அழைத்துச் செல்க!

பொறுமையற்றுக் கனைக்கும் குதிரைகள் பூட்டிய உனது வண்டி என் கதவண்டை தயாராக நிற்கட்டும்.

எனது முகமூடியைத்திறந்து, எனது முகத்தை கம்பீரமாகப் பார், ஓ, சாவே! எனது மரணமே!

## 82

நானும் எனது மனைவியும், இன்றிரவு மரண விளையாட்டு விளையாடப் போகிறோம்.

இரவு இருண்டிருக்கிறது. விண்ணிலே மேகங்கள் நிதானமின்றி மனம்போன போக்காகத் திரிகின்றன. கடலிலே அலைகள் மயங்கிப் புலம்புகின்றன.

கனவுப் படுக்கையை விட்டெழுந்து, கதவைத் திறந்து கொண்டு, நானும் என மனைவியும் வெளியே வந்து விட்டோம்.

நாங்கள் ஒரு ஊஞ்சலில் உட்கார்ந்திருக்கிறோம். பின்னின்று புயல்காற்றுகள் கொடிய வேகத்தில் முன்னே தள்ளுகின்றன.

மணப் பெண்ணான என் மனைவி, பயத்தாலும் இன்பவெறியாலும் மனமதிர்ந்து நெஞ்சங் கலங்கி என் மார்பைத் தழுவிக்கொள்கிறாள்.

நீண்ட நாள், நான் அவளுக்கு அன்போடு தொண்டாற்றி யிருக்கிறேன்.

நான் அவளுக்காக ஒரு மலர்ப்படுக்கை தயார் செய்து, வெளியே உள்ள கொடிய ஒளி அவள் கண்ணில் படாவண்ணம், கதவுகளைச் சாத்தினேன்.

சாந்தமாக அன்புடன் அவள் உதடுகளில் நான் முத்தமிட்டேன்; அவள் காதில் ரகசியம் பேசும் போது, அவள் களைத்து மெய்மறந்து போனாள்.

உறுதியற்ற இன்பத்தின் முடிவற்ற மூடுபனி யிலே, அவள் ஆழ்ந்திருந்தாள்.

அவள் என் ஸ்பரிசத்திற்குப் பதில் அளிக்க வில்லை; எனது பாடல்கள், அவளை எழுப்பும் சக்தி யையே இழந்து விட்டன.

இன்றிரவு நிர்மானுஷ்யமான காட்டிலிருந்து, புயலே எங்களுக்கு அழைப்பு அனுப்பியிருக்கிறது.

மணப்பெண்ணான என் மனைவி, மனமதிர்ந்து எழுந்து நிற்கிறாள்; என் கையைப் பிடித்துக் கொண்டு வெளியே வந்துவிட்டாள்.

அவளுடைய கூந்தல் காற்றில் பறக்கிறது; அவளுடைய முகமூடி திண்டாடுகிறது; அவளுடைய திருமணமாலை, மார்பிலே மின்னித் துடிக்கிறது.

மரண முகட்டிலே, அவள் உயிரோவியமாகவே மாறி விட்டாள்.

மணப்பெண்ணும் மாப்பிள்ளையுமாகிய நாங்கள் இருவரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டும், இதயத்தோடு இதயமாக ஒருமையை நோக்கியே நிற்கின்றோம்.

## 83

சோள வயலின் ஓரத்திலே, குன்றின்மேல் அவள் வசித்தாள்; அருகே இருந்த அருவி, சிரித் துக் கொண்டே, பழைய மரங்களின் நிசப்தமான நிழல்களின் ஊடே ஓடிக்கொண்டிருந்தது.

பெண்கள், அங்கே பானைகளுடன் தண்ணீர் எடுக்க, வருவார்கள்; பிரயாணிகள் அங்கே ஓய் வெடுத்துக் கொண்டு பேசிக் கொண்டிருப்பார்கள். அந்தச் சிற்றோடையின் நாதச் சுழலுக்கு ஏற்ப, மணப் பெண்ணான என் மனைவி தினந்தோறும் வேலை செய்து கொண்டும், கனவு கண்டு கொண்டும் இருந்தாள்.

ஒருநாள் அந்தி மாலையில், மேகம் படிந்த மலை யின் உச்சியினின்று, முன்பின் அறியாத ஒருவன் இறங்கிவந்தான்; அவனுடைய ஜடாமுடி, தூங்கும் பாம்புகள் போலப் பின்னிக் கிடந்தது. "நீ யார்?" என்று நாங்கள் அதிசயப்பட்டே கேட்டோம். அவன் பதிலிறுக்கவில்லை; புலம்பும் ஓடையினருகே அவன் உட்கார்ந்து கொண்டு, அவள் குடியிருந்த குடிசை யையே மௌனமாக உற்றுநோக்கினன்; பயத்தால் எங்கள் இதயங்கள் நடுநடுங்கின; இருட்டிலே நாங் கள் வீடுதிரும்பி விட்டோம்.

மறுநாட் காலையில், 'டியோதார்' மரங்களுக்குப் பக்கத்திலுள்ள அருவிக்குப் பெண்கள் தண்ணீர் எடுக்க வந்தார்கள்; அவள் குடிசையிலே, கதவுகள் திறந்து கிடக்கக் கண்டார்கள். அவள் குரல் எங்கோபோய் விட்டதே! அவளுடைய சிரித்த முகம் எங்கே! ஐயோ!

காலிப்பானை தரையிலே கிடந்தது; அவளு டைய விளக்கு மூலையிலே எரிந்து கருகிப்போயிற்று. விடிவதற்குள், அவள் எங்கே ஓடிப்போய் விட்டாள்

என்று ஒருவராலும் அறிந்துகொள்ள முடியவில்லையே? முன்பின் அறியாத அந்தப் புதிய மனிதனும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டானே!

வைகாசி வெய்யலில், சூரியன் கொடுமையாகக் காய்ந்தான், பனி உருகியது; அருவியனருகே நாங்கள் உட்கார்ந்துகொண்டு, அழுதோம், அழுதோம்!

“இந்தக் கொடிய வெய்யலில், அவளுடைய பானையில் தண்ணீர் கொண்டுவர வேறு ஒரு அருவி எங்காவது இருக்கலாமா?” என்று நாங்களே அதிசயத்துடன் ஆழ்ந்து சிந்தித்தோம்.

“இந்த உலகம் தாண்டி குன்றுக்கப்பால் நாம் வசிக்கக்கூடிய வேறு உலகமும் இருக்கக்கூடுமோ?” என்று நாஙகள் ஒருவரையொருவர் பீதியுடன் கேட்டுக் கொண்டோம.

அன்று ஒரு கோடை இரவு; தென்றல் ஜில்லிட்டு வீசியது. அணைந்த விளக்கு இருந்த, அவளுடைய காலி அறையிலே நான் உட்கார்ந்தேன். திடீரென்று, இழுக்கப்பட்ட திரைபோல, அந்தக் குன்றுகள் என் கண்ணினின்று மறைந்தன. “ஆ, அவளா வருகிறாள்! என குழந்தையே, உனக்கு எப்படி இருக்கிறது? நீ சந்தோஷமாயிருக்கிறாயா? இந்தத் திறந்த ஆகாசத்தினகிழ், உனக்குத் தங்க இடமிருக்கிறதா? ஆம். ஐயோ! உனது தாகத்தைத் தணிக்க இங்கே நமது அருவி இல்லையே!”

அவள் சொன்னாள் : “இங்கும் அதே ஆகாசம் தான், சுற்றியுள்ள மலைக் குன்றுகளினின்று விலகி

நிற்கின்றது; அதே அருவிதான், இங்கே ஆறுகப் பெருக்கெடுத் தோடுகிறது; அதேபூமிதான், இங்கே வெட்டவெளியாக விரிந்து விட்டது.'' நான் உடனே மனமதிர்ந்து பெருமூச்சுவிட்டுக் கொண்டு சொன்னேன்: ''ஓ, இங்கு எல்லாம் இருக்கிறதே; நாம் மாத்திரம்தான் இங்கில்லை.'' அவள் மலர்ந்தமுகத்துடன், சற்று வருத்தமாகச் சொன்னாள்: ''ஆ, என் இதயத்தில் நீங்கள் இடம்பெற்று விட்டீர்களே!''

நான் கனவிலிருந்து எழுந்தேன்; அந்த அருவி புலம்பக் கேட்டேன்; 'டியோதார்' மரத்திலே இலைகள் இருட்டிலே சலசலத்துப் புலம்பின.

## 84

நெற்கதிர்கள், வயல்களில் பச்சையாகவும் மஞ்சள வருணத்தோடும் நின்று காட்சியளிக்கின்றன; வேகமாக வேட்டையாடிவரும் சூரியன் பின்தொடர, இலையுதிர்கால மேகங்கள் வயல்களின்மேல் நிழல்களை வீசுகின்றன.

தேனீக்கள், தேன் குடிக்கவே மறந்து நிற்கின்றன; ஒளியைக் குடித்த போதையிலே, அறிவிழந்து தேனீக்கள் இங்குமங்கும் வட்டமிட்டு ரீங்காரமிடுகின்றன.

ஆற்றின் தீவுகளிலே, வாத்துக்கள் ஒரு காரணமுமின்றியே இன்பவெறியில் கத்தித் தீர்க்கின்றன.

சகோதரர்களே, ஒருவரும் விடுதிரும்ப வேண்டாம்; இன்று காலையில் ஒருவரும் வேலைக்குப் போக வேண்டாம்.

நில வானத்தையே நாம் புயலால் பிடித்துக் கொண்டு, ஓடிக்கொண்டே நாம் வெட்டவெளியைக் கொள்ளையடிப்போம்.

வெள்ளத்தின் உச்சியிலே நுரை மிதந்து வருவதுபோல, சந்தோஷம் காற்றிலேமிதந்துவருகிறது.

சகோதரர்களே! நமது காலை நேரத்தைப் பயனற்ற பொருளற்ற பாடல்களையே பாடிச் சிதறவடிப்போமாக!

## 85

இன்னும் நூறு வருஷங்களுக்கு அப்பால், என் பாடல்களைப் படிக்கின்ற வாசகன் நீ, யாரப்பா?

இந்த வசந்தச் செல்வத்திநின்று, உனக்கு நான் ஒரு தனி மலரை அனுப்பவே முடியாது; அங்கே மின்னிப் பொலிகின்ற மேகங்களினின்று, ஒரு தனிச் சிறு பொன் கிரணத்தைக்கூட அனுப்ப முடியாது.

நீயே கதவைத்திறந்து, வெளியே பார்! சென்ற நூறுண்டுகளுக்கு முன்னல், உனது பூந்தோட்டத்திலே மலர்ந்து மறைந்த பூக்களின் இனிய மணத்

தினின்று, உன் நெஞ்சிலே சிந்தனைகள் இனிமையாகவே குவிந்து நிற்கும்!

ஒரு வசந்தக் காலையிலே, ஒரு நூற்றூண்டு தாண்டியும் இன்பந்தரக்கூடிய இனிய குரலிலே பாடிய, ஆனந்த வெறியை, உன் இதய மகிழ்ச்சியிலே நீயே அனுபவித்து இன்புறுவாயாக!



## LOVE

Love is a primrose path : a rare glance sweetens and irradiates the Lover's heart: the Eye is a born Orator throwing subtle hints across romantic Dreamland.

Tears play bo-peep, and a kiss flashes in shower ; love is inspiration, divinely free, sweet and ambrosial, emerging from the heart's eloquence to the eye's telling oration.

The felicity of Union is interlaced bliss.

— V. R. M.

